நாங்கிநாடு வேளாள வகுப்பைச் சார்ந்த இக்கன்னிகாமணியார் சென்னைப் பல்கலைக் கழகப்பட்டம் வகித்திருக்கிறார். இப்போது இவ்வம்மையார் யாழ்ப்பாணம் இராமநாதன் கலாசாலையில் தலைமை ஆசிரியராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

ஸ்ரீமதி பி. செல்லம்மாள், பி.எ. (ஆனர்ஸ்.)

இவ்வம்மையார் திருவாங்கூர் அரச வமிசத்தைச் சார்ந்தவர். திருப்பந்துறை ராஜ குமாரத்திகள். உயர்தரப் பாடசாலை ஆசிரியராக நியமிக்கப்பட்டுள்ளார். அரச வமிசத்தைச் சார்ந்தவர்கள் உத்தியோக மேற்றது இதுவே முதல் தடவையாகும்.

ஸ்ரீமதி இக்காவு அம்மாள், பி. எ. (ஆனர்ஸ்.)

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



| தொகுதி 14 | விபவஹு ஆவணிமீ ௧உ<br>1928ஹு ஆகஸ்டுமீ 16உ | பகுதி 2 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

காயிலை யுதிர்ந்தகனி சருகுபுனல் மண்டிய
கடும்பசி தனைக் கடைர்தும்
கார்வரையின் முழையிற் கருங்கல்போ லசையாது
கண்மூடி நெடி திருந்தும்
தீயினிடை வைகியுந் தோயமதின் மூழ்கியுந்
தேகங்க ளென்பெலும் பாய்த்
தெரியநின் றுஞ்சென்னி மயிர்கள்கூ டாக்குருவி
தெற்றவெயி லூடி ருந்தும்
வாயுவை யடக்கியு மனதினை யடக்கியு
மௌனத்தி லேயிருந்தும்
மதிமண்ட லத்திலே கனல்செல்ல வமுதுண்டு
வனமூ டிருந்து மறிஞர்
ஆயுமறை முடிவான வருணாடி னாரடிமை
யகிலத்தை நாடன் முறையோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (1)

கண்டா ருளத்தினிற் காலூன்றிப் பெய்யுங் கருணைமுகில்
அண்டார் புரத்துக்கு மன்பர் வினைக்கு மசனி தன்னைக்
கொண்டாடி னார்மனங் கூத்தாடு மச்சென்றன் கோலமெல்லாம்
விண்டாலம் மாவொன்றுங் காணாது வெட்ட வெறு வெளியே. (2)

மூன்றுகண்ணா முத்தொழிலா மும்முதலா மூவுலகுந்
தோன்றக் கருணைபொழி தோன்றலை—ஈன்றவன்னை
தன்னைப்போ லன்பு தழைத்தோ யொருதெய்வ
முன்னைப்போ லுண்டோ வுரை. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. "அறிஞர், தம்பசிக்குக் காய், கனி, சருகு முதலியவற்றை உண்டும், மலைக்குகையில் கல்லைப்போல் கண்மூடி நெடுங்காலம் இருந்தும், நெருப்பின்மேலிருந்தும், நீரில் மூழ்கியும், தேகம் எலும்பாய்த் தெரிய மெலிந்து நின்றும், தலைமயிர்கள் தும்பைடைந்து கூடாகி அவற்றில் குருவிகள் உட்கார்ந்து அலைக்க வெயிலில் இருந்தும், வாயுவை அடக்கியும், மனத்தினையொடுக்கியும், மௌனத்திலிருந்தும், தாபந்தணியும்படி சந்திரமண்டலத்திலுள்ள அமிர்தத்தையுண்டு வனத்தின் மத்தியிலிருந்தும் ஆராயப்பட்ட வேதாந்தப் பொருளாகிய அருள் வடிவாம் நின்னை நாடினர்; அடியேன் நிலையற்ற உலகவாழ்வையே நாடுகின்றேன்; இது முறைமையாகுமோ?" என்று சுவாமிகள் இதில் பரம்பொருளாகிய கடவுளைக் கேட்கின்றார். இதனால், உலகநாட்டத்தை யொழித்து நித்தியவஸ்துவின் நாட்டத்தைத் தமக்கருளும்படி ஆசிரியர் இறைவனை வேண்டுகின்றாரென்பது விளங்கும்.

புருவத்தின் இடதுபுறத்தில் சந்திரமண்டல மிருக்கின்றது; அதினின்றும் அமிர்தம் பெருகியொழுகும்; அதை, நாபியில் அக்கினி வடிவமாயிருக்கின்ற சூரியன் குடித்துவிடாமல யோகிகள், யோகப்பழக்கத்தால் தாமேயருந்துவர்.

கார்வரை=மேகந்தங்கியமலை. முழை=குகை. தோயம்=நீர். என்பு=எலும்பு. சென்னி=சிரம். தெற்ற=அலைக்க. அகிலம்=உலகம்.

2. "தன்னைத் தரிசித்தவர் உள்ளத்திலே பெய்யும் அருள் மழையும், பகைவர்களுடைய திரிபுரங்கட்கும் அடியார்களுடைய தீவினைக்கும் இடியுமாகியவனும், தன்னைக் கொண்டாடுவார் முன்னே கூத்தாடுங் கடவுளும் ஆகிய இறைவனது வடிவத்தையெல்லாம் சொல்லப் புகுந்தால் அது சிறிதும் காணப்படாது; வெட்ட வெறும்வெளியாகிய சிதாகாயமேயாம்" என்று பகவானுடைய சொரூபத்தின் இயற்கை ஆசிரியரால் இதில் விளக்கப்பட்டது. இறைவன், "சிதாகாயவடிவினன்" என்பது இதனால் துணியப்படும்.

முகில்=மேகம். அண்டார்=பகைவர்; திரிபுராதிபர்கள். அசனி=இடி. அத்தன்=கடவுள்.

3. இதில், சிவபெருமானைப்போன்ற வேறு தெய்வமில்லை யென்பதை ஆசிரியர் விளக்கினார். திரிநேத்திரதாரியாகிய சிவன், பிரம, விஷ்ணு, ருத்திரர் என்னும் மூத்தேவர் வடிவங்களாய் முத்தொழில்களையும் நடத்தி மூவுலகத்தாருக்கும் கருணைபுரிந்து, அடியார்மீது அன்னைபோல் அன்பு செலுத்தக்கூடியவனாதலின் அவனை இங்ஙனம் கூறினார். சிவன் முத்தேவர் வடிவினனென்பதை, சிவஞான சித்தியாரில், "தேவரிலொருவனென்பார் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்றதோரார்" என்பதா லுணர்க.

மும்முதலா=மூன்று மூர்த்திகளாயுள்ளவனே. தோன்றல்=பெருமையிற் சிறந்தவன்.

---




# மெய்ப்புகழும், பொய்ப்புகழும்.

உலகத்தில் மக்கட் பிறப்பில் தோன்றிய ஒவ்வொருவரும் தேடத்தக்கவைகளுள் தலை சிறந்து நிற்பது புகழ் ஒன்றேயாம். இஃது உலகமுள்ளளவுமையிலும் அழியாது நிற்கும் பெருஞ் செல்வமாம். இது,

> "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
> பொன்றாது நிற்பதொன் றில்"

என்னுந் திருக்குறட் செய்யுளானு முணரப்படும். ஆதலின் இத்தகைய புகழை மனிதர் அவசியம் தேடிக்கொள்ளுதல் வேண்டும். புகழுடையாரை உலகமுழுவதும் போற்றும்; தேவர்களுந் துதிப்பார்கள்; தெய்வமும் விரும்பும். இத்தகைய புகழ் இரப்பார்க்கு வேண்டுவன கொடுத்தல் முதலிய தான தருமங்களாலும், வேறு பல செயற்கரிய செயல்களைச் செய்வதனாலுமே ஏற்படுவதாம். அங்ஙனமுண்டாவதில் மெய்ப்புகழ், பொய்ப்புகழ் என இரண்டு வகையுண்டு. இவ்விரண்டில் மெய்ப்புகழாவது ஒருவர், உண்மையாகவே கொடையாலும், கல்வியாலும், வீரத்தாலும், வேறுபல செயற்கரிய செயல்களாலும் அடைவதாம். பொய்ப்புகழாவது, ஒருவர் தம்மிடத்தில் அப்புகழ்ச்சிக்குரிய காரியம் சிறிதுமில்லாவிடினும் அதனைச் செய்தார்போன்று நடித்துப் பிறரை மயக்கி அவரால் நன்கு மதிக்கப்படுதலாம். இவ்விரண்டினுள்ளும் உண்மைப் புகழ்தான் புகழென்று சொல்லப்படும். பொய்ப்புகழ், புகழ் என்று சொல்லளவிலுங்கூடச் சொல்லுதற்கும் பொருந்தாததாம்.

பண்டைக்காலத்தில் நம் நாட்டில் உண்மைப் புகழ் தேடுவோரே மலிந்திருந்தனர். பலர், கல்வியிற் பெரியாராய்ப் பற்பல நூற்களை இயற்றியிருக்கின்றனர்; தனிக்கவிகளைச் சாற்றியிருக்கின்றனர்; தங்கள் பாடல்களிற் கூறிய சொற்கள் பலிதமாகும்படி செய்து தெய்விகச் செயல்களைக் காட்டியிருக்கின்றனர்; அவர்கள்

இயற்றிய நூற்களும், பாசுரங்களும் நிலைபெற்றிருந்தன ; இப்போதும் நிலைபெற்றிருக்கின்றன; இனிமேலும் இருக்கக்கூடியனவாய் விளங்குகின்றன; அவற்றால் அவர்களுக்கு உண்மைப் புகழுண்டாய் என்றும் அழியாததாய் நிலைபெற்றிருக்கின்றது. சிலர், இரப்பார்க்கில்லை யென்னுமல் தங்கள் பொருள்களை வாரிக் கொடுத்திருக்கின்றார்கள்; குமணன் ஒரு தமிழ்ப்புலவனுக்குத் தலையையும் கொடுக்க இசைந்தான்; சிபி தன் உடலையும் ஒரு புறவுக்கு நல்கினான். இந்த அரும்பெருஞ் செயல்களால் இவர்களுக்கு உண்மைப் புகழுண்டாகி என்றுமழியாததாய் நிலைத்திருக்கின்றது. சில பேரரசர்கள், அற்புதமான சிற்பவேலைகளமைந்த கோவில்களையும், அரண்மனைகளையும், கோபுரங்களையும் நிருமித்திருக்கின்றனர் ; அன்ன சத்திரங்களையும், கல்விச்சாலைகளையும், மடங்களையும் அமைத்திருக்கின்றனர்; பலவகைத் தருமங்கள் எப்பொழுதும் நிலைபெற்று நடந்தேறிவருமாறு கிராமங்களையும், நிலங்களையும் தானம் செய்திருக்கின்றனர்; சிலர் வீரத்தின்மிக்காராய்ப் பெரிய வெற்றிகளை அடைந்திருக்கின்றனர்; சிலர் கைத்தொழில்களில் வல்லுநரா யிருந்திருக்கின்றனர் ; சிலர் வைத்தியத்தொழில் வல்லாராய்ப் பல அற்புத மருந்துகளை முடித்துப் பற்பல தீரா வியாதிகளைத் தீர்த்து உலகத்தவரால் கொண்டாடப்பட்டிருக்கின்றனர். சிலர் இசையிலும் நாடகத்திலும் பேரறிவாளராய்ச் சிறந்து விளங்கியிருக்கின்றனர். இவற்றால் இவர்களுக்கு மெய்ப்புகழ் உண்டாகி இவர்கள் பெயர் என்றுமழியாமல் நிலைபெற்றிருக்கின்றது. இன்னும் எத்தனையோ பேர்கள் எத்தனையோ வகைகளில் உண்மைப் புகழ் தேடி நிலைநிறுத்தி யிருக்கின்றனர். இவர்கள் இவ்வாறு உண்மைப் புகழைத் தேடிக்கொண்டபடியால் இம்மை, மறுமை ஆகிய இரண்டிடங்களிலும் நன்மையே பெற்றிருக்கின்றனர்.

இக்காலத்திலோ மனிதரிற் சிறுபான்மையோரே-எங்கோ அருமையாகச் சிலரே-உண்மைப் புகழ் அடைதற்கேதுவான காரியங்களைச் செய்துவருகின்றனர். பெரும்பான்மையோர் பொய்ப் புகழ்க்குரிய காரியங்களையே பெரிதும் முயன்று செய்துவருகின்றனர். பண்டைக்காலத்திலிருந்த பெரும்புகழாளர், தங்கள் புகழ் உலகில் என்றென்றும் நிலைநிற்கும்படி மிக்க அற்புதமாகக் கட்டி வைத்த கோவில் முதலியவற்றில் ஏதோ சிறு சிறு மாறுதலான வேலைகளைச் செய்துவிட்டு, முன்னோரின் இயற்கைப்புகழ் மறைந்து தங்களுடைய செயற்கைப் போலிப் புகழ் நிலை நிற்க விரும்பிப் பத்

திரிகைகளில் தாங்கள் செயற்கரிய காரியங்களைச் செய்துவிட்ட தாக விரிந்த வியாசங்கள் வெளிவரும்படி சிலர் செய்கின்றனர். சிலர், தங்கள் வீட்டில் சிரார்த்தம் நடக்குங் காலத்திலோ, திரு விழாக் காலங்களிலோ, வேறு விசேட நாட்களிலோ பத்துப் பிரா மணர்களுக்குச் சாப்பாடு போட்டுவிட்டோ, பதினைந்து பரதேசி களுக்குச் சோற்றுக்கவளம் கொடுத்துவிட்டோ, இருபது ஏழை களுக்குக் கூழ் வார்த்துவிட்டோ, ஆயிரக் கணக்கான ஜனங் களுக்கு அன்னதானம் செய்ததாகப் பத்திரிகைகளில் பற்பல வியாசங்களை வெளியிட்டு வருகின்றனர். சிலர், வைத்தியத்தில் தங்களுக்குச் சிறிதும் தேர்ச்சியில்லாதிருந்தும், தாங்கள் அநேகம் சித்தர் முறைகளைக் கண்டுபிடித்துவிட்டதாகவும், தீராத நோய் களைத் தீர்த்துவிட்டதாகவும், இரசவாதத்தில் கைதேர்ந்து இரும் பைப் பொன்னாக்கிவிட்டதாகவும் புளுகான செய்திகளை யெழுதிப் பல பத்திரிகைகளின் வாயிலாக உலகத்தில் பரப்புகின்றனர்; அறு கம்புல் வேரையும் இழுத்தறுக்கமுடியாத சிலர், மனிதர் பலரால் தூக்கமுடியாததைத் தூக்கிவிட்டதாகவும், பறிக்க முடியாததைப் பறித்துவிட்டதாகவும், அறுக்க முடியாததை அறுத்துவிட்டதாக வும், இன்னும் பல வல்லமையான காரியங்களைச் செய்துவிட்டதா கவும் எங்கும் விளம்பரம் செய்கின்றனர்; ஒரு உருவத்தையாவது கிரமப்படி வரையத்தெரியாத சிலர், உலகத்தில் எவருமே செய்ய முடியாத சித்திர வேலைப்பாடுகளைத் தாங்கள் செய்திருப்பதாகப் பத்திரிகைகளில் விளம்பரப்படுத்துகின்றனர். இன்னும், மனதை ஐந்துநிமிஷமேனும் ஒரே நிலையில் நிறுத்தமுடியாத சிலர், தாங் கள் மிகுந்த யோகப்பழக்கம் செய்திருப்பதாகவும், ஆறுமாதகாலம் வரையிலுங் கூடச் சாப்பாடு முதலியன இன்றி யோகத்தில் அமர்ந் திருக்கத் தங்களால் முடியுமென்றும், ஆகாய கமனஞ் செய்ய இய லுமென்றும், மனிதர்க்குத் திரிகால வர்த்தமானங்களைத் தெரிவிக் கக்கூடுமென்றும், ஜலத்தில் நடக்கக்கூடுமென்றும், நெருப்பிலிருக் கக்கூடுமென்றும், தம்மை அடுத்தவர்க்கு வேண்டிய வரங்களைக் கொடுக்கக்கூடுமென்றும் கட்டுப்பாடான கட்டுரைகளைப் பத்திரி கைகளில் வெளியிடுகின்றனர். சிலர், மோசம், வஞ்சனை, திருட்டு முதலிய அயோக்கியத்தனமான காரியங்களை மிகுதியும் செய்பவர் களாயிருந்தும் உலகத்தார் தம்மைப் பெரியவரென மதிக்கும்படி தலையை மொட்டையாக்கிக் காவி வஸ்திரந் தரித்து, சாதுவென் றும், சாமியென்றும், முனிவரென்றும், தவசியென்றும், யதியென்

றும், தம்பிரானென்றும் பல போலிப் பட்டங்களைத் தாமே சூட்டிக்கொண்டு தாங்கள் பெரிய மகிமைகளைச் செய்துவருவதாக எங்கும் வாய்ப்பறை யறைந்தும், பத்திரிகைகளில் வியாசங்கள் எழுதி வெளிப்படுத்தியும் வருகின்றனர். சில வியாபாரிகள், தங்களிடம் சேர்ந்திருக்கும் காரியஸ்தர்கள் அரும்பாடுபட்டு மதிநுட்பத்தோடு தொழில்நடத்தி அதிக ஊதியம் வரும்படி செய்ய, அது தங்களுடைய சாமர்த்தியத்தினலேயே கிடைக்கிறதென்று எங்கும் பிரஸ்தாபித்துப் பொய்ப்பெருமை யடைகிறார்கள். ஒரு தொழில் வல்லான் கட்டிடமொன்றைத் தன்னுடைய சாமர்த்தியத்தால் அற்புதமாகக் கட்டி முடிக்க அத்தொழிலில் தேர்ச்சியேயில்லாத சிலர், பெரிய வேலைக்காரர்கள்போல் அவனுடன் கலந்து திரிந்து கொண்டே தாங்களே அவ்வற்புதக் கட்டிடத்தைக் கட்டி முடித்ததாகப் பலரிடத்தும் கூறிப் பொய்ப்பெருமை யடைகிறார்கள்; சிலர், தாங்கள் சுதேசப்பற்று சிறிதுமில்லாமலிருந்தும், பரோபகாரம் அணுவளவுமில்லாதிருந்தும், பலர் தங்களை மதித்துக் கொண்டாடவேண்டுமென்றும், பலரிடம் எளிதில் பணம் கவர்ந்து சுயநலமும், சுய சௌக்கியமு மடையவேண்டுமென்றுங் கருதித் தேசிய உடைகளை யணிந்தும், மேடைகளில் உண்மைத் தேசபக்தர்களைப்போல் ஆவேசங்காட்டிப் பேசியும், வலிதிற் சிறைச்சாலை புகுந்து வந்தும், மெய்யாகவே உடல், பொருள், ஆவி மூன்றையும் தேசநன்மைக்குத் தத்தம் செய்தவர்களைப்போன்று பெருநடிப்புச் செய்து பத்திரிகைகளிலும் துண்டுப் பிரசுரங்களிலும் தங்கள் போலிச் செயல்களை யெழுதி வெளியிட்டுத் தலை நிமிர்ந்து தற்பெருமைகொண்டு திரிகின்றனர்; சிலர், தெய்வபக்தி சிறிதுமில்லாதவராயிருந்தும் ஜனங்களுக்கு முன்னிலையில் மகா பக்திமான்களைப்போல் வெளிவேடந்தரித்துப் பஜனை பாடிக் கூத்தாடுகின்றனர்; சிலர், தலை சுழலக் கட்குடித்துக் கண் சிவந்து கூத்தாடுவோராயிருந்தும் மகா தருமசீலர்களைப்போல மேடைமேலேறி மதுவிலக்கைப்பற்றி ஆத்திரத்தோடு பேசி அட்டகாசஞ்செய்து பொதுஜனங்களுக்குத் தாம் மகா உத்தமர்களெனக் காட்டிக்கொள்கிறார்கள். இன்னும் கல்வி சம்பந்தமாகச் சிலர் செய்துகொள்ளும் வீண் பெருமைகள் மிக்க விநோதம் பொருந்தியவைகளாயிருக்கின்றன; எழுத்தின் பேதங்களைக் கூட உணராத பலர் மேடைகளில் ஏறி மிகுந்த கல்வியாளரைப்போன்று வாயில்வந்த எதையெதையோ உளறி விரைந்து பேசிப் பாமரரைக் கரம்புடைக்கச் செய்தும், தம்

மைக் கட்டுரைக் களஞ்சியமென்றும், சொற்பொழிவுச் சோனை மாரியென்றும், சங்கத்தொனிச் சரபமென்றும் அவர்கள் புகழ்ந்து தமக்கு அப்பட்டங்களைக் கொடுக்கச்செய்தும் தம்மைப் பெரும் புலவர்களெனப் பத்திரிகைகள் வாயிலாக வெளியிட்டுக் கொள்கின்றனர். எண்ணத்தொலையாத வழுக்கள் நிறைந்த புத்தகங்களை யெழுதி விநோதப் பெயர்களுடன் வெளியிட்டு அவற்றிற்குத் தங்களைப் [illegible]ான்றவர்களிடத்தும், தமிழ்மொழியைச் சிறிது முணராமல் பெரிய உத்தியோக பதவியிலிருக்கும் சிலரிடத்தும் மதிப்புரைகள் வாங்கி அச்சிட்டு எங்கும் பரப்பிப் போலிப் பெருமை யடைகின்றார்கள்; பெரியோர் செய்த நூல்களுக்கும் உரை யெழுதப் புகுந்து மனம்போனபடி எதை யெதையோ எழுதிப் புத்தக ரூபங்களை மாத்திரம் அழகுடன் வெளியிட்டுப் படிப்பில்லாத பாமரக்கூட்டத்தாரிடத்தும், கற்றறி மோழைகளிடத்தும் தங்களைப் பெரிய உரையாசிரியர்களெனக் கூறி வீண் புகழ்பெறப் பெரிதும் முயல்கின்றனர். ஒரு இலக்கணத்திலும் பொருந்தாமல் செய்யுட்களென்று பெயரிட்டு எதை யெதையோ எழுதிப் பாட்டின் இயற்கை தெரியாத கூட்டத்தாரிடத்தில் காட்டி இறுமாப்புடன் திரிகின்றனர். வேறுசிலர், முறைப்படி செய்யுள் எழுதத் தெரிந்த நற்புலவர்களிடத்தில் கெஞ்சிச் சில செய்யுட்களை யெழுதித்தரச்சொல்லி வாங்கி, அவற்றைத் தாங்களே இயற்றினவர்களென்று பலரிடத்துங் கூறியும், அச்சிட்டு வெளிப்படுத்தியும், பாவலர்களெனத் தாமே பட்டஞ் சூட்டிக்கொண்டு ஆங்காங்கே படாடோபஞ்செய்து களித்துத் திரிகின்றனர்; சிலர், முறைப்படி கல்வி கற்ற பெரும் புலவர்களிடத்தில் பணம் கொடுத்தோ, கொடுக்காமலோ நூல்களை யெழுதித் தரும்படி கேட்டு அவர்களால் எழுதிக் கொடுக்கப்படும் நூல்களைத் தாங்களே யெழுதியவைகளென வெளியிட்டு, உண்மையறியா மனிதர்களிடத்தில் பெரிய நூலாசிரியர்களென நடிக்கிறார்கள்; சிலர், தமிழைச் சிறிதுமுணராமல் இங்கிலாந்து முதலிய இடங்களிலிருக்கும் இராஜகுடும்பத்தார் மீதும், பெரிய பதவியிலிருப்பவர்மீதும் புகழ்க்கவிகள் எழுதித் தரும்படி உண்மைக் கவிவாணர்களிடம் இரந்து கேட்டு அவற்றை வாங்கி, அவை தம்மாலேயே இயற்றப்பட்டனவென்று குறிப்பிட்டு நல்லவிதத்தில் அச்சிட்டு இங்கிலாந்திலுள்ள அந்த மேதாவிகளுக்கனுப்புகிறார்கள்; அவர்கள் உண்மையுணராமல், கவிநயமுங் காணாமல் அந்தப் போலிப் புலவர்களுக்குப் பட்டங்களளித்து உபசாரக் கடிதங்களெழுதுகிறார்கள்; அவற்றைப் பலரிடத்தும் காட்டி அந்தப் போலிகள் பெருமை யடைகிறார்கள். இன்னும் நாடகக்காரர்களும், சங்கீதக்காரர்களும் வால் நோட்டீசுகளில் பொய்ப்பெருமை கூறிப் பறையறைகின்றனர். இன்னும் பலவகைகளிலும் பொய்ப்புகழ் தேட முயல்வார் எண்ணிலர்; அவர்களை யெல்லாம் எடுத்தெழுதுவதென்றால் இவ்வியாசம் மிக விரிவெய்தும்,

இவையெல்லாம் அறிஞர் வெறுக்கத்தக்க இழி செயல்களா யிருப்பினும் மேற்கூறிய பகுப்பினர் இவற்றிற்குச் சிறிதும் நாணுவதில்லை. இவற்றைவிட்டுப் பயனுடைய காரியங்களைச் செய்யும்படி பிறர் கூறினும் இவர்கள் அதைக் கேட்பதில்லை. இவர்களுடைய இந்தப் போலிச் செயல்களைப் பத்திரிகைக்காரர்கள் கண்டிக்கவேண்டியவர்களா யிருந்தும் அவர்களிற் பெரும்பான்மையோர் ஆதரிக்கின்றனர். சில அறிஞர் அப்போலிச் செயல்களைக் கண்டெழுதப் புகுந்தால், அப்போலிமாக்களும், அவர்களைச் சார்ந்தார் சிலரும் அந்த அறிஞரையே இழிவாகப் பேசியும், எழுதியும் அவர்களின் வாயை அடக்கி ஆர்ப்பரிக்கின்றனர். சில நூதன விவேகிகள், "நம்மவர் போலித்தனங்கள் செய்தாலும் அவர்களை நிந்திக்கலாகாது; அவர்கள் பொய்யாகவேனும் புகழடைவது நம் நாட்டிற்குத்தானே பெருமை" என்று வெகு நுட்பமான அபிப்பிராயம் சொல்கிறார்கள்.

யார் என்ன கூறினும் மனிதர் பொய்ப்புகழ் தேட நாடுவது மிகவும் இழிவான காரியம்; எவ்வளவு சாமார்த்தியமாக மேற்கூறிய போலிச் செயல்களைச் செய்துவந்தாலும் அவற்றால் எப்பொழுதும் நிலைக்கக்கூடிய மெய்ப்புகழ் உண்டாகவேமாட்டாது; அச்செயல்களால் ஆரம்பத்தில் மருண்ட ஜனங்களால் சிறிது புகழுண்டாவதுபோற் காட்டும்; பின் அவர்களுடைய போலிச் செயல்களின் உண்மை வெளிப்பட வெளிப்பட அச்செயற்கைப் புகழ் தானே மறைந்து அவர்களுக்கு இழிவே அதிகரித்து நாட்பட நாட்பட அவர்களுடைய பெயரே இல்லாமற் போய்விடும்; அவர்கள் உயிருடனிருக்கும்போதும் அவர்களைப் பலர் பார்த்துப் பரிகசிப்பர். அவர்கள் மக்களாகக் கருதப்படார்; மாக்களாகவே கருதப்படுவார். இவற்றையெல்லாம் அனுபவத்திற் காணலாம். இத்தகையினர் மலிந்துவருவது நம் நாட்டிற்கே பெரிய இழிவாகும்; நம் நாடு சிறக்கவேண்டுமானால் இத்தகைய மதியின்மாக்களின் போலிச் செயல்கள் ஒழியவேண்டும்; பத்திரிகைக்காரர்களும், நூலாசிரியர்களும், சொற்பொழிவாளர்களும் இச்செய்கைகளையுடையாரையும், இவர்களின் நடிப்புச் செயல்களையும் பாரபக்ஷமின்றிக் கண்டிக்கவேண்டும்; பண்டைக்காலத்தைப்போல உண்மைக்கல்வியும், உண்மைத் தொழில்களும் விருத்தியடையுமாறு செய்யவேண்டும்; உண்மைத்தொழில் வல்லாரையும், கலைவல்லாரையுமே கொண்டாடவேண்டும்; உண்மைப் புகழ்பெறச் செய்தல் வேண்டும். இவ்வாறு உண்மைக் கீர்த்தியை நிலைநாட்டி வந்தால் நம் நாடு பண்டைச் சிறப்படைந்து என்றென்றும் நிலைபெற்று விளங்கும்.

ஓம் தத் ஸத்.

---

# ஆனந்த சந்திரோதயம்.

'பிரம்மானந்தம்'-ஆனந்தத்தை யடைய விரும்பாத ஜீவகோடிகள் எங்குமே யில்லை. மனமொப்பிச் செய்யும் ஒன்றிலிருந்து அடையும் இன்பத்தால் எழுவது ஆனந்தம். தான் விரும்பியதை அடைந்து அனுபவித்தலே இன்பம். அவ்வின்பம், சிற்றின்பம் பேரின்பமென இருதிறப்படும். சிற்றின்ப நுகர்ச்சிகளால் எய்துவது ஆனந்தமே யாயினும் அது நம்மை அந்தகாரத்திலாழ்த்தி அடிமைப்படுத்திவிடுகின்றது. பேரின்பமானது என்றும் நிரந்தரமான ஆனந்தத்தை நல்கி சாஸ்வத பதவியை அடைவிக்கின்றது. அதுவே பிரம்மானந்தமாகும். கேவல உலக இன்பங்களில் மனம் சிறிது உழன்று மாயையான போலிச்சுகத்தை யனுபவித்த காலத்திலும், 'ஆகா! பிரம்மானந்தமாயிருந்தது' என்கிறோம் நாம். இதனால் பிரம்மானந்த நிலையே பேரின்ப நிலையென்பது பெறப்படும். அவ்வானந்தம் விவேகத்தாலடையப்படும்பொழுது, 'விவேகானந்த' மென்றும், ஞானத்தால் கைவரப் பெறுங்கால், 'ஞானானந்த' மென்றும், ஆன்மாவின் நிஜ சொரூபத்தை யறிவதனால், 'சொரூபானந்த' மென்றும், என்றும் ஈஸ்வர சிந்தையுற்றிருப்பதால், 'நித்யானந்த' மென்றும், சதாகாலமும் சர்வேஸ்வரனை பஜிப்பதால், 'சதானந்த' மென்றும், பிராணிகளிடத்துத் தயையுடன் விளங்குவதால், 'தயானந்த' மென்றும், மாநில மாயைகளிடம் போர்தொடங்கி வெற்றிகொண் டிலங்குவதால், 'நிர்பயானந்த' மென்றும், பிரம்மானுபூதியில் சித்திபெறுவதால், 'தேஜோமயானந்த' மென்றும், மனம் வாக்கு காயங்களால் சத்கர்மாக்களைப் புரிந்து இலங்குவதால், 'சர்வபரிபூரண அகண்டானந்த' மென்றும் பரம பகவத் பக்த சிரோமணிகளாலடையப்படுகின்றது. இவ்வானந்தமாகிய சந்திரன் மனிதரின் மனத்தகத்தே உதயமாகித் தனது பூரண கலைகளுடன் பிரகாசிப்பதால் முக்தியை யடைவது திண்ணம்.

* * *

'பக்தி ரஸம்'-ஈஸ்வர பக்தி யில்லாமல் மோக்ஷ சாம்ராஜ்யம் லபிக்கமாட்டாது. எவ்விதம் இறைவனை பக்தி செய்யலாமென்பதைப் பெரியோர்கள் நிரூபித்துள்ளார்கள். பக்தி, சாந்தி, தாஸ்யம், சக்கியம், வாத்ஸல்யம், மாதுரியம் என ஐந்து வகைப்படும். சாந்திரஸம் பக்தியின் பிரதம சோபானமாகும். சாந்த மேற்படும் வரையில் பக்தி தோன்றுகிறதில்லை. சாந்திரஸத்தில் ஈஸ்வரனிடத்தில் பரிபூர்ண நம்பிக்கையும், சமுசார வாசனைகளில் வெறுப்பும் பொருந்தியிருக்கும். சாந்திரஸ பக்தனுக்கு ஈஸ்வரனிடத்தில் மமதைமட்டு மிராது. ஈஸ்வர சொரூபஞானம்மட்டும் அவனிடத்துண்டு. தாஸ்ய பக்தனுக்கு உன்னத்தில் மமதைமட்டும் ஏற்படும்; அவன் பகவானை

சேவ்யன் என்றும், தன்னைச் சேவகனென்றும் உறுதிபூண்டு அளவிலாக் கௌரவம் பாராட்டி பகவானுக்குச் சேவை செய்வான். சக்கியமென்பது தோழமை. சக்கியரஸ பக்தன் கௌரவ பாவங்கள் ஒழிந்தவனாய், ஜீவாத்மாக்களெல்லாம் சமமென்ற பாவத்துடன், ஈஸ்வரனிடத்தில் பரிபூரண விசுவாசமுடையவனாய், அவரோடு போராடி, பிரேமையால் வாதுசெய்து, அபிமானத்தால் களிப்பித்து பக்திசெய்வான். அவனுக்கு ஈஸ்வரனைத்தவிர வேறெப்பொருளும் உயர்ந்ததாகத் தோன்றாது. வாத்ஸல்ய பக்தன் பகவானைத் தனது புத்திரனெனப் பாராட்டி பிரேமை கொள்வான்; நீராட்டல் ஆடை உடுப்பித்தல், உணவூட்டல், தாலாட்டுதல், தூங்குவித்தல் முதலான குழந்தைக்குச் செய்தற்குரிய உபசாரங்களனைத்தையும் பகவானுக்கு அன்புடன் செய்து ஆனந்தமடைவான். மதுரரஸ பக்தன் நாயகி எங்ஙனம் தன் நாயகனையேயன்றி வேறெவரையும் சிந்திக்கவும் மாட்டாளோ, அதேபோல பகவானைத்தவிர வேறு யாரையும் நினைக்கமாட்டான். இவனே பகவானுக்கு ஆத்மநிவேதனஞ் செய்தவனாவான்.

* * *

'வித்தை இரண்டுவிதம்'—பரவித்தை, அபரவித்தையென்று வித்தை இரண்டு விதப்படும். இவற்றுள் பரவித்தையே சிறந்தது. இருக்கு, எஜுர், சாம, அதர்வண வேதங்கள், உச்சரிப்பைப்பற்றிய, 'சிக்ஷா' சாஸ்திரம், கல்பம், வியாகரணம், தர்க்கம், நிருக்தம், காவியம், வான சாஸ்திரம் முதலியவற்றைக் கற்பதே அபரவித்தையாகும். பிரம்மஞான நூல்களைக் கற்பதே பரவித்தையெனப்படும். பரபக்தியின் இலக்கணம் தேவீபாகவதத்தில் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது: "ஒரு பாத்திரத்திலுள்ள எண்ணெய் இடைவிடாமல் வேறொரு பாத்திரத்தில் சொரியுந் தன்மைபோல் எப்பொழுதும் பகவானிடத்தில் பக்தி செலுத்துவதே பரபக்தியாம்." இதுபோல மனதையும், ஹிருதயத்தையும் பகவானிடத்திலேயே எக்காலமும் செலுத்துவது சிறந்த பக்தியாகும்—விவேகானந்தர்.

* * *

'பெறலாமே நல்வினையே'—என்றார் திருஞான சம்பந்த சுவாமிகள். ஏ பாழும் மனமே! உனக்கோர் நன்மொழி கூறுவன்; கேள்; நீ தினந்தோறும் சர்வேஸ்வரனுடைய திவ்யநாமங்களையன்றி வேறெதையும் நினையாதே. இறக்கும் நாளையும், இனி வாழுங்காலத்தையும் வரையறுத்துக் கண்டார் யார்? ஆதலின், எம்பெருமானுக்கு உன்னுடைய சிரம் நாள்தோறும் மலர்களைச் சுமக்க, அவருடைய திவ்யநாமங்களைச் செவிகள் கேட்ப, நாவானது அவரை இரங்கிப்போற்ற நீ நல்வினையை யடையலாம். இதனைவிடச் சுலபமானவழி உனக்கு வேறு எதுளது? இதனைக் கடைப்பிடி.

* * *

'மனக்கூரங்கு'—எங்கும் பரிபூரணமாய் நிறைந்து விளங்குபவனே! பிரம்மகபாலத்தைக் கரத்தலேந்திப் பிச்சை யெடுக்கும் பெருமானே! எனது

மனமென்னுங் குரங்கானது, சதாகாலமும் மாதர்களின் தனங்களென்னும் மலையின்மீது நடனஞ் செய்துகொண்டும், மனைவி மக்களென்னும் மரக்கிளைகளின்மீது திரிந்துகொண்டும், மோகமென்னும் காட்டில் அலைந்துகொண்டுமிருக்கிறது. இவ்விதம் சித்தம் போன போக்கெல்லாம் அலைந்துகொண்டிருக்கும் என் மனமென்னுங் குரங்கை, உறுதியாக உனது பாதாரவிந்த பக்தியென்னும் கயிற்றால் பிணித்து உனது சொற்படி ஆடுமாறு செய்து கொண்டால், உனக்குப் பிச்சை அதிகமாகக் கிடைக்குமன்றோ? ஆதலால், ஏழையேன்மீது இரங்கி என் மனக்குரங்கை உனது வசத்தில் வைத்துக் கொண்டு என்னை பந்தத்திலிருந்து விடுவிக்கக்கடவாய்—ஸ்ரீ சங்கரர்.

* * *

**'மனம்போலிருக்கும் மங்கிலியம்'**—என்பதோர் பழமொழி. இதனைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம். ஒருவனுடைய செய்கைகள் எல்லாவற்றிற்கும் அவனது மனந்தான் காரணமாயிருப்பது. ஒருவனை நாம் நல்லவனென்கின்றோம். அது ஏதனால்? அவன் மனம் நல்லதாயிருக்கின்றது. ஆகையால் அவன் நல்லவன். இதேபோல ஒருவன் மனம் கெட்டதாயிருப்பதனால் அவனைக் கெட்டவனென்று சொல்லுகிறோம். ஒருவன் ஞானவானாயிருக்கிறான். அவனுடைய மனது ஞானத்தை நாடுகிறது. ஒருவனைப் புண்யவானென்பதும் அவன் மனமானது புண்யத்தையே புரிவதாற்றான். ஒருவன் பாபியாவதற்குக் காரணம் அவன் மனமானது பாபகிருத்தியங்களை நாடுவதுதான். ஆகவே, எல்லாவற்றிற்கும் மனமே காரணமாகின்றது. ஆனதுபற்றி எவனுடைய மனம் பகவானிடம் ஈடுபட்டிருக்கிறதோ அவனே பாக்கியவானாவான். அவனே பக்தசிரோமணி. அவனுக்கு எவ்வித யோகசாதனங்களும் தேவையில்லை. பகவானைத் தியானிப்பதால் சகல காரியத்தையும் சாதித்துக் கொள்ளலாமென்பதை இதனினின்றும் நாமறிகிறோம்—விவேகானந்தர்.

* * *

**'அன்பில்லாத வழிபாடு'**—உயிரில்லாத உடம்பு போன்றது. அன்பாவது தன்னால் விரும்பப்பட்டவரிடத்தில் தோன்றும் உள்ள நெகிழ்ச்சி. பகவானிடத்து அன்புடைமைக்கு அறிகுறிகளாவன: அவருடைய திவ்யநாமங்களை நினைக்குந்தோறும், கேட்குந்தோறும், பரவசமாதலும், மயிர்ப்பொடிப் பெய்துதலும், ஆனந்த பாஷ்பஞ் சொரிதலும், விம்மலும், நாத்தழும்பேற வழுத்தலும், உரைதடுமாறுதலும், அவரால் விரும்பப்படுவனவற்றையே செய்து, அல்லன செய்யாதொழிதலும், அவருடைய மெய்யடியார்களைக் காணுந்தோறும் கூசாது வணங்குதலும், பிறவுமாம்.

S. V. V.

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.




## ஸ்ரீ ஜெகதீஸ் சந்திர போஸ்.

**முன்னுரை**

இப்பூமண்டலத்திலேயே இதுவரை தோன்றியுள்ள மேதாவிகளெல்லோரும் உணர்த்தாத ஓர் பேருண்மையை உணர்த்திய மகானுபாவர் ஸ்ரீ. ஜெகதீஸ் சந்திரபோஸ் அவர்கள். புற்பூண்டுகளும், மரஞ் செடி கொடிகளுமான தாவரங்களனைத்தும் மானிடரைப் போன்றே பேசுகின்றன, உண்கின்றன, உறவாடுகின்றனவென்று சாஸ்திரீயமாக நிரூபித்துக்காட்டிய மேதாவியுமிவர். அமேரிக்கா முதலான ஆங்கிலநாடெங்குமுள்ள அறிவாளிகளனைவரும் ஒருமிக்கப் போற்றிக்கொண்டாடப் புகழேந்தியாக விளங்கும் இவர் டேக்கா விலுள்ள பிக்ராம்பூர் என்னும் கிராமத்திலேயிருந்த ஓர் கௌரவ குடும்பத்தைச் சார்ந்தவர். இவர் பிறந்தநாள் 1858-ம் ஆண்டு நவம்பர் மாதம் 30-தேதியாகிய புண்யதினம். இவருடைய தந்தையின் பெயர் பகவான் சந்திர போஸ் என்பது. அவர் பரீட்பூர் என்னும் நகரில் ஜில்லா அதிகாரியா யிருந்துவந்தார். ஒழுக்கத்திலும் குணத்திலும் அறிவிலும் சிறந்தவரான பகவான் சந்திரபோஸ், இளமை முதல் தமது செல்வனை ஆராய்ச்சித் துறையிலேயே பழக்கிவந்தார். இயல்பாகவே ஜெகதீஸ்சந்திரருக்கு நூதன ஆராய்ச்சி விஷயங்களிலே ஊக்கமிருந்தது.

**வித்யாப்பியாசம்**

பகவான் சந்திரர் தமது குமாரரின் விருப்பத்திற் கேற்றபடி அவருக்குக் கல்வியளிக்கக் கருதினார். அப்பொழுது புதுமுறைப்படி கல்வி கற்பிக்கப்படும் கலாசாலைகட்கு அனுப்புவதில் அவருக்கு திருப்தியேற்படாமையால், பழங்கால வழக்கப்படி கல்விகற்பிக்கும் பாடசாலைக்கே முதல் முதலாகத் தமது குமாரரை அனுப்பினார். இவ்விதம் செய்ததில் இளமை முதலே இயல்பாகத் தமது குமாரருக்கு பாஷாபிமானமும், மதாபிமானமும், தேசாபிமானமும் ஏற்படுமென்பதுதான் அவருடைய கருத்து. இக்காலத்தில், ஏற்கெனவே பெரியதோர் கள்வர்கூட்டத் தலைவனாயிருந்து, அட்டூழியங்கள் செய்து பகவான் சந்திரரால் பிடிக்கப்பட்டுத் தண்டனையடைந்து, நீடித்தகாலம் சிறைவாசஞ்செய்து திரும்பிவந்த ஒருவன் ஜெகதீசருக்குத் தூக்குத் தூக்கியா யமைந்தான். இங்ஙனம் பாடசாலைப்படிப்பு முடிவடைந்ததும் அவர் கல்கத்தாவிலிருந்த, 'செயிண்ட் சேவியர் காலேஜில்' சேர்ந்து வாசித்து பி.ஏ. பரீக்ஷையிற் றேறினார். கிராமங்களில் சமயநெறி தவறாது திருநீறணிந்து, சுசிருசியாய் மதநூல்களை ஓதிவரும் மாணவர்கள்,மேலானதென்று கருதப்படுகிற நவீனமுறைக் கல்வி பயில நகரங்கட்கு வந்ததும், சமயாசாரம்போய், சாஸ்திரஞானம் கெட்டு, ஆசாரம் குலைந்து, பேச்சிலும் ஒழுக்கத்திலும் குணத்திலும் செய்கை

யிலும் சிந்தையிலும் எள்ளளவும் இந்துவென்னு மறிகுறியற்று அல்லற்படு வதுபோல, அத்துணை அலங்கோலங்கள் ஜெகதீசரைப் பற்ருவிடினும், சீமைக்குச்சென்று ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குப் படிக்கவேண்டுமென்னும் அவ்வொரு எண்ணம் மட்டும் அவரை வந்தடைந்தது. ஆனால், இந்நோக்கங்களோடு தமது புத்திரரை இங்கிலாந்துக் கனுப்ப பகவான் சந்திரர் எள்ளளவும் விரும்பவில்லை. சகவாஸ தோஷத்தால் ஏற்பட்ட ஆசையின் வேகம் அடங்கும் வரையில் அவர் காத்திருந்தார். தாம் பார்த்துவரும் வேலையின் துறையிலேயே தமது குமாரரையும் புகுத்த அவர் பிரியப்படவில்லை. முடிவாக சாஸ்திரத்தில் மேற்படிப்புப் படித்து வருவதற்குக் குமாரனுர் விரும்ப தந்தையாரும் அதை ஒப்பி அவரை அனுப்பினர். அவ்வாறே ஜெகதீசர் இங்கிலாந்துக்கேகி 1884-ம் ஆண்டில் லண்டன் கிறிஸ்தவக்கலாசாலையில் கலா குமாரப்பட்டம் பெற்ருர். அடுத்த ஆண்டு லண்டன் சர்வகலாசாலையில் சாஸ்திரநூற் புலவர் (B. Sc.,) பட்டம்பெற் றிலங்கினர்.

அப்பொழுது அவருக்கு இருபத்தைந்து பிராயந்தான். வித்யாப்பியாசம் ஒருவாறு முடிவடைந்ததும், அவர், அப்பொழுது இந்திய ராஜப்பிரதிநிதியாயிருந்த கனம் ரிப்பன் துரையவர்கட்கு அவரது அத்யந்த நண்பரான வித்வான் பாசெட் (Prof. Fawcett) அவர்களிடமிருந்து ஒரு சிபார்சுக் கடிதம் பெற்றுக்கொண்டு இந்தியாவுக்குத் திரும்பினர். இதனல் கல்கத்தா மாகாணக் கல்லூரியில் அவருக்கு சாஸ்திரீய (Science) ஆராய்ச்சியாளர் உத்தியோகம் கிடைத்தது. மிகவும் குறைந்த சம்பளத்திற்கு அவர் பொறுமையுடன் வேலை பார்த்து வந்தார். அவர் ஆராய்ச்சிக்கேற்ற சௌகரியங்கள் முதலில் ஏற்படவில்லை. பிறகு கல்கத்தா மாகாணக் கல்வித்தலைவர் அவருடைய திறமைகளைக்கண்டு மெச்சினர். ஆனல் தக்க பயனென்றும் விளைந்துவிடவில்லை. ஜெகதீசர் அவர் செய்த தினைத்துணை நன்றியைப் பனைத்துணையாகக்கொண்டு பாடுபட்டு வந்தார். அப்பால், 1895-ம் ஆண்டில் அவர் சில அதிநுட்பமான ஆராய்ச்சித் திறமமைந்த புதிய சாஸ்திரீய விஷயங்களைப் பத்திரிகைகட்கு வரையத் தொடங்கினர். அது முதல் அவருக்கு நற்காலமும் ஆரம்பித்தது. பிறகு மின்சாரத்தின் சில விசேஷ சக்திகளையும் அவற்றைக் கொண்டு அனுஷ்டிக்கக்கூடிய முறைகள் சிலவற்றையும் அவர் முதல் முதலாகக் கண்டு பிடித்து, அவற்றை விளக்கி, 'மின்சாரமாயவன்' (Electrician) என்னும் பத்திரிகையில் எழுதினர். அவருடைய சாரமனைத்தும் மின்னலைவத்திழுத்தது இச்சாரமுள்ள அவரது மின்சார வியாசம். உடனே ராஜரீக சாஸ்திராராய்ச்சிக் கழகத்தினர் (Royal Society) ஜெகதீசரைப் புகழ்ந்து கொண்டாடி அவர் வெளியிட்டுள்ள விஷயங்களைத் தமது வெளியீட்டில் பிரசுரித்தனர். அதிலிருந்து அவருக்கோர் நிரந்தர வெகுமதியுங் கிடைத்தது. 'ஏழையாயிருக்கிற வரையில் எனக்கு வேண்டாம் உனக்கு வேண்டாம் என்ற எனனப் பேச்சுத்தான்; எழில்மிகுந்தால் எனது உறவினர்;

உத்தியோகம்

மாமன் என்ற உறவல்லவா?' இது கண்ட வங்காள அரசாங்கத்தார் சீமையில் போற்றப்பட்டவரைத் தாமும் ஆதரிக்க வேண்டிய கொள்கை கருதி, அவரது ஆராய்ச்சிகளைத் திறம்பட நடத்துமாறு சாஸ்வதப் பொருளுதவி புரியமுற்பட்டனர்.

எவ்வளவோ பாடுபட்டுக் கிடைத்த பணவுதவி ஓர் இயந்திரஞ் செய்யவும் போதாததாக, ஜெகதீசர் பொறுமையுடன் தமது ஆராய்ச்சிகளை மனந்தளராது செய்து வருவாராயினர். அப்பால் 1896-ம் ஆண்டில் லண்டன் சர்வகலா சாலையார் அவருக்கு டாக்டர் பட்டமளித்து (Doctor of Science) நன்கொடையருளி உற்சாகப்படுத்தினர். பின்னர், கம்பியில்லாமலே மின்சார உதவிபெற்ற தந்திகளைத் தேவையான இடங்களுக்கு எப்படி யனுப்பலாமென்று இங்கிலாந்தில் ஒரு நிபுணரும், அமெரிக்காவில் ஓர் அறிவாளியும், இந்தியாவில் ஜெகதீசருமாக ஆராயத் தொடங்கியதில் ஜெகதீசரே வெற்றி பெற்று அதற்குரிய சாதனங்களை முதல் முதலாக அறிவித்தார். இதனால் அவருக்குப் புகழோங்க ராஜரீக சாஸ்திரீய வித்வத் சம்மேளனத்தார் அவரை அச்சபையினுதாவில் உபந்யசிக்குமா றழைத்தனர். இங்ஙனம் அவர் மும்முறை கௌரவிக்கப்பெற்றார். 1901-ம் ஆண்டு மேமீ 10உ அவரது இரண்டாம் முறை சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. அதில் அவர் சாஸ்திரீயமாய் மின்சார ஆதாரங்காட்டிப் பிராணிகள் தாவரங்களின் வாழ்வை விளக்கினர்.

அவர் 1901-ம் ஸு ஜூன்மீ 6உ விரிவான தமது ஆராய்ச்சி விஷயங்களை வியாசபூர்வமாக, அதுவரையில் உலகில் எவருமே கண்டுபிடிக்காத சாஸ்திர (Science) உண்மைகளுடன் வெளியிட்டார். "ஆகா! ஒரு இந்தியனுக்கேது இத்துணை மூளை? ஆங்கிலேயர்கள் கண்டுபிடிக்காத விஷயங்களைக்கூட இவர் கண்டுபிடிக்க முடியுமா? கண்டுபிடிக்கலாமா?" என்ற அழுக்காற்று வசனங்கள் அங்குத் தலைகாட்டித் தாண்டவமாடத் தொடங்கிவிட்டன. இதற்கு ஜெகதீசர் அஞ்சவில்லை. பாரதநாடே ஏனைய நாடுகளுக்கு அறிவூட்டியதாயகமென்பதை அவர் நிரூபிக்கச் சித்தராயிருந்தார்; தமது ஆராய்ச்சிகள் தவறென்று, வெல்லாமல் மாட்டிவிட எண்ணியவர்களை, நிரூபித்துக் காட்டும்படி வாதாடினர். ஆனால் இவரும் மற்ற இரண்டு ஆங்கிலேயர்களுமாக என்னசெய்ய முடியும்? கோவிந்தநாம சங்கீர்த்தனத்திற்கு கோவிந்தா போட ஆயிரக்கணக்கானவர்கள் கூடிவிட்டார்கள். ஆகவே, ஜெகதீசர் இந்தியாவுக்குத் திரும்பி வந்துவிட்டார். ஆனால் கடல் மடுப்பினும் மனங்கலங்கா உறுதிப் பாடுடைய அவர் தமது ஆராய்ச்சிகளை மேற்கூறிய ராஜரீக சங்கத்தார் ஏற்கும்படி செய்து வெற்றித்தார் சூடத் தருணம் பார்த்திருந்தார். உண்மைக்கு ஒருநாளும் அழிவில்லை யல்லவா? இவருடைய கட்சியில் இரண்டு ஆங்கிலப் பெருந்தகையார் சேர்ந்தனர். இந்தியாப் பிரதிநிதியும் இவர் சார்பில் அனுதாபங்காட்டினராதலின் இவர் மறுபடியும் இங்கிலாந்துசகுப்போய்த் தமது இன்னும் புதிய ஆராய்ச்சிகளை வெளியிட, 'பழையகுருடி கதவைத்திறடி' என்பதுபோல், 'இவற்றையெல்லாம் நாங்கள் முன்னமேயே கண்டுபிடித்து விட்டோம்' என்று அவர்கள் கூறிவிட்டார்கள். அப்பால் அவர் பாரிஸ் நகரில் இரண்டொரு பிரசங்கங்கள் செய்தார். அதன் பயனாக அங்குள்ளவர்கள் தம் தேச சாஸ்திர ஆராய்ச்சிக் கழகத்தில் அவரை ஓர் அங்கத்தினராகத் தேர்ந்தெடுத்தனர். கோபுரி (Oxford) சர்வகலாசாலையிலும், கேதார (Cambridge) சர்வகலாசாலையிலும் அவர் சில பிரசங்கங்கள் செய்தார்.

ஜெகப்பிரசித்தி

அவ்வருடம் ஜூன்மீ 27வ வீயன்னுவில் ஓர் பெரிய சபையில் தாவரங்களின் இயக்கத்தைப்பற்றி ஓர் சொற்பொழிவு நிகழ்த்திவிட்டு, அவர்கள் உபசாரணைகளை ஏற்றுக்கொண்டு, பிறகு அமெரிக்காவுக்குச் சென்றார். நியூயார்க், புரூக்லின், ஹார்வர்ட், கொலம்பியா, சிகாகோ முதலிய சர்வகலாசாலையினர் அதிக ஆச்சரியத்துடன் அவரது தாவர சாஸ்திர விளக்க வுரைகளைக்கேட்டு, அவரைச் சிரமீது தாங்கிப் புகழ்ந்தனர். ஆங்காங்கு உபசாரப்பத்திரங்களும் அவருக் களிக்கப்பெற்றன. பின்னர், அவர் இந்தியாவுக்குத் திரும்பினர்.

**உலக யாத்திரை**

ஒருவன் பேருண்மைகளைக் கரடியாகக் கத்தி வெளியிட்டாலும், 'இவனுக்குப் பித்தம் பிடித்திருக்கிறது; மாந்திரீகனைக்கொண்டு சிகிச்சைசெய்ய வேண்டு' மென்று செப்பும் இயற்கையான அலட்சிய சுபாவமுடைய மக்கள் நிறைந்த இந்தியாவில் மேல்நாடுகளில் கௌரவிக்கப்பெற்றமையால் அவருக்குப் புகழோங்க வாரம்பித்தது. பாஞ்சால சர்வகலாசாலையினரும் அவரைப்பாராட்டி 1913-ல் அவருடைய பிரசங்கங்களைக் கேட்டுப் போற்றுவாராயினர்.

இனி, சாஸ்திரீக உலகமே புகழ்ந்தேத்துமாறு அவர் கண்டு பிடித்த புது விஷயங்களென்னவென்று கூறுவோம். பிராணிகட்குள்ளதுபோன்றே தாவரங்கட்கும் சுவாஸாசயம், நரம்புகள், சுவாஸ அதிர்ச்சி முதலியன உண்டு என்பதை அவர் ஓர் அரிய கருவியைத் தயாரித்து, அதன் வாயிலாகப் பிரத்யக்ஷமாக்கினர். மேலும், தாவரங்களில் முக்கியமாகத் 'தொட்டாற்சுருங்கி' என்பதைப்போன்ற செடிகளின் நரம்புகள் மானுட சரீரத்தைப்போன்றே இயங்குகின்றன வென்பதையும் நிரூபித்தார். இவ்வுண்மையை ஜெகதீசர் புகன்ற முறையை யனுசரித்து ஜர்மானிய சாஸ்திர நிபுணர்களிருவர் ஆராய்ந்து ஒப்புக்கொண்டார்கள். தாவரங்களின் இயக்கத்தைப்பற்றி அவர் கண்டுபிடித்த விஷயங்களை நிரூபிக்க எதிரொலிக்கும் இயந்திரமொன்றை (Resonant Recorder) நிர்மாணித்தார். இவ்வியந்திரத்தில் பல நுட்பமான புள்ளிகளுள்ளன. அவற்றுள், இரண்டு புள்ளிகட் கிடையேயுள்ள இடம் ஒரு கணத்தின் நூற்றி லொருபங்கு நேரத்தை யுணர்த்துகிறது. இதைக்கொண்டு மனித சுவாஸாஸயத்தின் அதிர்ச்சியில் ஆயிரத்தி லொருபங்குள்ள தாவரங்களின் சுவாஸாஸய அதிர்ச்சி வெகு சுலபமாகக் கண்டு பிடிக்கப் படுகிறது. இந்திய சித்திரிகர்களைக்கொண்டே மிகவும் நுட்பமும் மிருதுவுமான இயந்திரத்தை அவர் தமது நேர்பார்வையில் செய்வித்து மேல்நாடுகளுக்கு அனுப்பி வருகிறார். நாம் ஒரு செடியை கோல்கொண்டு அடித்தால், அந்த அடியை அது ஒரு கணத்தின் அறுநூற்றி லொரு பங்குநேரத்தில் ஏற்றுப் பதில் கொடுக்கிறதென்பதையும் இக்கருவி கணக்கெடுத்துக் காட்டுகிறது. கோடைகாலத்தில் பொதுவில் தாவரங்கள் ஒரு கணத்தில் 30-மில்லி மீட்டர் அளவு சுவாசநாடி யதிர்ச்சியை யடைகின்றன வென்றும், போதை வஸ்துக்களை பிராணிகள் உண்ணுங்கால், அவற்றின் சுவாஸாஸய அதிர்ச்சி குறைவதுபோல, தாவரங்களின் நிலையும் சிறிது சாராயத்தை ஊற்ற மாறுகின்றதென்றும் அக்கருவி மிகவும் நுட்பமாகக் காட்டுகிறது. மற்றும் செடிகள் இரவு 12-மணி முதல் காலை 8-மணிவரையில் நித்திரை போகின்றன வென்பதையும் அக்கருவியினுதவியால் ஜெகதீசர் பிரசித்தப்படுத்தினர். தாவரங்களின் இறப்பும், அவை பிராணிகளைப்போலனுபவிக்கும் மரணவாதனைகளும் அவருடைய ஆராய்ச்சியால் கண்டுபிடிக்கப்பட்டன.

**புதியனவாக வெளியிட்ட பேருண்மைகள்**

1906-ல் 'தாவரங்களின் பிரதிவாதம்' (Plant Response) என்னும் நூலும், 1907-ல் 'மின்சார அங்க வியாபார நூல்' (Elctro-Physiology) என்ற பனுவலும் அவரால் இயற்றப்பெற்றன.

பாரிஸ் சாஸ்திரீய காங்கிரஸ் மகாசபைக்கு இந்திய சாஸ்திர ஆராய்ச்சிக் கழகத்தின் ஆதரவில் அவர் துரைத்தனத்தாரால் அனுப்பப் பெற்றார். 1903-ல் அவருக்கு 'ஸி. ஐ. இ' பட்டமும், 1911-ல் 'ஸி. எஸ். ஐ' பட்டமும், 1917-ல் 'நைட்' பட்டமும் அளிக்கப்பெற்றன. வங்காளநாட்டு மாணவர்கள் கூடி அவருக்கு யுக பிரவர்த்தகர் என்ற பிரதாபநாமஞ் சூட்டினர். அவர் கல்கத்தாவில் 'போஸ் ஆராய்ச்சிக்கழகம்' என்ற பெயருடன் பல நுட்பமான கருவிகள் நிறைந்த ஓர் சாஸ்திராராய்ச்சி சாலையை அவருடைய ஐம்பத்தொன்பதாவது பிறந்ததினமான 1917-ம் ஆண்டு நவம்பர்மீ 30உ யன்று திறந்து வைத்தார். அதில் ஜாதி மத நிற வித்தியாசமன்னியில் அனைவரும் கல்வி கற்று வருகின்றனர். விலையுயர்ந்ததும் அதிநுட்பமானதுமான கருவிகளைக்கொண்டு அக்கழகத்தில் கண்டுபிடிக்கப்படும் விஷயங்கள் பிரம்ம வித்தை போன்றே யிருப்பன. 1918-ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் ஜெகதீசர் அக்கழகத்தில் வங்காள கவர்னரான கனம். ரோனல்ஷே யவர்களுடைய தலைமையின்கீழ் பனைமரத்தின் சரித்திரத்தை விளக்கிப் பிரசங்கமொன்று செய்தார்.

**அரசாங்கத்தார் செய்த சிறப்புகள்**

ராஜப் பிரதிநிதியான மேன்மைதங்கிய செம்ஸ்போர்ட் துரைமகனார் இக்கழகத்தை வந்துபார்த்து, புளகாங்கித மெய்திச் சிறப்புரைகள் செப்பிச் சென்றார். வெகுசமீபத்தில் செடிகளை மிக்க தொலைவிலுள்ள நாடுகளுக்குக் கொண்டுபோய் நல்ல நிலையில் மறுபடியும் நட்டுப் பயிராக்குவதற்குரிய வழிகளை அவர் கண்டுபிடித்தார். அவர் மென்மேலும் புதுப்புது விஷயங்களை வெளிப்படுத்திவர, ஐரோப்பியர்கள் அவரைத் தமது நாட்டிற்கு மறுபடியும் விஜயம் செய்யுமாறழைத்தனர். அதற்கிணங்க, ஜெகதீசர்போய் லண்டன், பாரிஸ், பர்லின், வீயன்னா முதலிய விடங்களிலுள்ள சர்வகலாசாலை மண்டபங்களிற் றமது ஆராய்ச்சிகளை விஸ்தரித்துப் பிரசங்கித்துவிட்டு, 1920-ல் இந்தியாவுக்குத் திரும்பினார். 1921ஸு ஆகஸ்டு மாதத்தில் டெக்கா சர்வகலாசாலையார் அவருடைய பிரசங்கங்களைக் கேட்டுச் சிறந்தனர்.

**உயரிய கௌரவம் பெற்றமை**

உலகத்திலேயே எங்களைவிட நாகரீகத்திலும், புத்தியிலும் சிறந்தவர்கள் இருக்க முடியாது என்று பேசும் மேல்நாட்டு மேதாவிகள் அஞ்ச, அகிலம் தோன்றியது முதல் இதுவரையில் எவரும் கண்டுபிடிக்காத சாஸ்திரீயமான பேருண்மைகளைக் கண்டுணர்த்தி, அவற்றுள் முக்கியமாகத் தாவரங்களின் வாழ்க்கை, அவை மனிதற்குரிய அத்தனை குணதோஷங்களோடு வாழ்கின்றன வென்று பிரத்யக்ஷமாகக் காட்டியும், இவற்றைக் கண்டுபிடிப்பதற்கு அனுகுணமான இயந்திரங்களை யுண்டு செய்தும், ஸ்ரீ ஜெகதீஸ் சந்திர போஸ் இந்தியாவின் புகழை மேலோங்கச் செய்தார். அவர் வெளிப்போந்ததால் மேல்நாட்டினருக்கு இந்தியாவினிடத்தில் அச்சமும் பக்தியும் ஏற்பட்டன. ஒளிமிகுஞ் செயல்கட்கெல்லாம் உறைவிட மிந்தியா வென்னும் உண்மையை நிலைநாட்டிய இம்மகானுபாவருக்குப் பல்லாண்டு கூறுதும்.

**முடிவுரை**

ஸ்ரீ லக்ஷ்மீ காந்தன்.

# தமிழ்நாட்டுக் கதர் உற்பத்தி.

மகாத்மா காந்தியடிகள் நாட்டின் முன்னேற்றத்திற்குக் காட்டிய நல்வழிகள் பலவற்றுள்ளும் கதர் இயக்கமே சிறந்ததாக அகிலத்தாரால் ஏற்கப்பட்டதாகும். ஜெர்மானியர் மகாத்மாவின் இராட்டையைப் பூசித்து அக்கைத்தொழிலே தமது நாட்டின் செல்வத்தைப் பெருக்குமென்றோர்ந்து அனுஷ்டித்து வருகின்றனர். இராஜீய விஷயத்தில் எவ்வித அபிப்பிராய பேதமுள்ளவரும், எக்கட்சியினரும், கதரை ஆதரிக்கவேண்டுமென்று அறிஞர் கடிதத்தில் தீர்மானமூலமாகவாவது வரைந்து வருகின்றனர். கதரும் நாளுக்குநாள் அபிவிருத்தியடைந்து வருகிறது. வரவர வெகு நயமான கதர் உடைகள் உற்பத்தியாகின்றன. அதில் 1926-27-ம் ஆண்டில், இந்தியாவில் கதரபிவிருத்தி கூடியவரையில் திருப்திகரமானதாகவே யிருக்கின்றது. அதிலும், தென்னாடு ஏனைய மாகாணங்களைவிட அதிகமாகவே கதராடைகளை உற்பத்தி செய்திருக்கின்றது. 1925-26-ல் தமிழ்நாட்டில் 64-கதராலயங்களிருந்தன. 1926-27 ல் மூன்று அதிகமாயுள்ளன. இவற்றுள் 25 தான் அகில இந்திய சர்க்கா சங்கத்தின் ஆதரவில் சென்ற 1925-26 ல் நடைபெற்று வந்தன. ஆனால் 1926-27 ல் 33, மேற்படி சங்கத்தின் ஆதரவில் நடைபெற்றன. ஆறு உற்பத்தி சாலைகளும், இரண்டு விற்பனை சாலைகளும் இவ்வாண்டு அதிகமாக வுள்ளன. சொந்த நிர்வாகத்தில் நடைபெறும் கதர் உற்பத்தி நிலையங்களுள் திருச்செங்கோடு காந்தி ஆச்சிரமம், கொங்கு கம்பெனி ஆகிய இரண்டும் விசேஷ ஆடைகளை விருத்திசெய்து வருகின்றன. ஆனால், சில சொந்தக்கதர் நிலையங்கள் போதிய மூலதனமின்மையாலோ, ஊக்கமுடன் உழைப்பாரற்றதாலோ நின்றுபோய்விட்டன. இது காரணமாக கதரபிவிருத்திக்குக் குறைவேற்பட்டுள்ளதென்று சொல்வதற்கில்லை.

கடந்த இரண்டாண்டுகளைவிட இந்த ஆண்டில் கதர் அபிவிருத்தி அதிகமென்றே சொல்லலாம். திருப்பூர் கதர் வஸ்திராலயத்தில் மிகவும் பாராட்டத்தக்க அபிவிருத்தி யேற்பட்டுள்ளது. அவநாசி, ஊத்துக்குழி, படியூர், வேல்லக்கோயில், புளியம்பட்டி முதலிய கிராமங்களிலுள்ள நெசவாளிகளனைவரும் கதர் நெசவிலேயே ஈடுபட்டுள்ளனர். பலர் முன்வந்துழைப்பார்களானால் மேற்கூறிய கிராமங்களிலுள்ள தறிக்காரர்களி னுதவியால் நேர்த்தியான ஆடைகளை வேண்டிய அளவு விருத்திசெய்யலாம். சொந்தமாக நடத்தப்பெறும் கதர் நிலையங்கள் பலவற்றுள்ளுமே திருச்செங்கோடு காந்தி ஆஸ்ரமத்தாரும் கொங்கு கம்பெனியாரும் நல்ல கதர் விருத்தி செய்திருக்கிறார்கள். காந்தி ஆச்சிரமத்தார் இவ்வாண்டு ரூ. 1,27,163 பெறத்தக்க கதரையும், கொங்கு கம்பெனியார் ரூ. 1,56,820 பெறத்தக்க கதரையும் உற்பத்தியாக்கி யுள்ளனர். பின்வரும் கணக்கைக்கொண்டு ஆண்டாண்டு ஏற்பட்ட கதர் அபிவிருத்தியைக் காணலாம்.

| ஆண்டு | அ. பா. ச. சங்கம் | உதவிபெற்றதும் சொந்தமானதும் | மொத்தம் |
|---|---|---|---|
| | ரூபா | ரூபா | ரூபா |
| 1923—24 | 2,90,148 | 1,82,216 | 4,72,364 |
| 1924—25 | 3,96,962 | 3,08,826 | 7,05,788 |
| 1925—26 | 3,02 907 | 5,80,313 | 8,83,220 |
| 1926—27 | 3,72,826 | 7,24,201 | 10,97,027 |

கொங்கு கம்பெனியும், காந்தி ஆச்சிரமமும் சில கிளைகளை நிறுவி மிகவும் ஊக்கத்துடன் கதரபிவிருத்தி செய்து வருகின்றன. காந்தி ஆச்சிரமத்தார் கொல்லங்கோட்டிற்குப் பன்னிரண்டு மைல் தூரத்திலுள்ள கோள்ளையார் என்னுமிடத்தில் நூற்கும் கிளை நிலையமொன்றை ஸ்தாபித்துள்ளனர்; திருப்பூரைச்சேர்ந்த நூற்கும் பாகங்களிலும் கிளைகளை வைத்து நூலுற்பத்தி செய்து வருகின்றனர்.

தமிழ்நாட்டில் நூற்போரும், நெசவுத் தொழில் புரிவோரும் முறையே 12,829; 1,138 பேர்களுள்ளனரென்று தமிழ்நாட்டுச் சர்க்கா சங்கத்தாரால் கணக்கெடுக்கப்பட்டுளது. அவற்றுள், திருப்பூரிலேயே வேனைய தொழிற் சாலைகளைவிட அதிகமான நூற்போரும் நெசவாளரும் உள்ளார்களெனக் குறிப்பிடப்பெற்றுளது. சொந்த நிர்வாகங்களில் 18,343 நூற்போரும் 1,581 நெசவுத்தொழிலாளரும் உள்ளாரென மேற்படி சங்கத்தார் தமதறிக்கையிற் குறிப்பிட்டுள்ளனர். அவற்றுள் புதுப்பாளையம் காந்தி ஆச்சிரமத்திலேயே அதிகமான கதரபிவிருத்தி நடைபெறுகின்றது. அங்கு, 1,772 நூற்போரும், 123 நெசவுக்காரர்களு முள்ளனர்.

கோயம்புத்தூர் சேலம் முதலான பாகங்களில் கதரபிவிருத்தியானது வறுமையால் கஷ்டப்படும் மக்களுக்கு வேலைதந்து உதவிபுரிய நல்ல ஹேதுவாயிருந்து வருகின்றது. திருச்செங்கோடு காந்தி ஆச்சிரமத்தார் இரண்டரை ஆண்டுகளில் ரூ. 1,22,929 நூற்போருக்கும், நெய்வோருக்கும், சலவை செய்வோருக்குமாகக் கொடுத்துள்ளனர். நூற்போர் மாதமொன்றுக்குச் சராசரி இரண்டுமுதல் மூன்று ரூபாய்கள் வரை சம்பாதிக்கிறார்கள். தமிழ்நாட்டுக் கதர் வஸ்திராலயத்தார் அறிக்கைப்படி ரூ. 63,439, நூற்குங்கூலியாகவும், ரூ 90,534 நெசவுக்கூலியாகவும், ரூ. 5,498 சலவைக்கூலியாகவும் வழங்கியுள்ளனர். இதையன்றி கணக்கிற் ககப்படாத கூலிகளுமுள.

விலையும் தரமும் 1926-27 ஆண்டில் திருப்பூர் கதர், பருத்தி விலையேற்றத்தால் ஒன்றுக்கிரண்டாக விற்க நேரிட்டது. கதர், பரிமாண அபிவிருத்திக்கேற்றபடி நயமும் தரமும் இவ்வாண்டில் அதிகரித்துள்ளன. அவற்றில், உயர்தரமான ரூ. 72,436 பெறுமானமுள்ள கதராடைகள் உற்பத்தி செய்யப்பெற்றுள்ளன. இதற்கு முந்திய வருடத்தில் ரூ. 54,661 பெறுமானமுள்ள உயர்தர ஆடைகளே உற்பத்தியாயின.

*

விற்பனை கதராடையின் தேவை வரவர அதிகமாயிருந்து வருவது அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தருவதாகும். அதனால் கதராடை விற்பனையும் விசேஷ விருத்தி யடைந்துள்ளது. சென்ற கதராண்டிறுதியில் அ. பா. ச. சங்கத்தினுதரவில் தொடங்கப்பெற்ற புதுக்கதர்க்கடைகளும் நல்ல விற்றுமுதல் செய்திருக்கின்றன. இத்திருப்திகரமான விற்பனையைக் கண்டு கொங்கு கம்பெனியார் சென்னையிலும், திரு. சங்கரப்பச் செட்டியார் நாகையிலும் சில்லறை விற்பனைக் கடைகள் ஏற்படுத்தினர். சென்ற மூன்றாண்டுகளின் கதர் விற்பனை விவரம் பின்வருமாறு:

| ஆண்டு | அ. பா. ச. ச. | சொந்தமும் உதவிபெற்றதும் | மொத்தம் |
|---|---|---|---|
| | ரூபா | ரூபா | ரூபா |
| 1924—25 | 4,09,759 | 3,27,596 | 7,37,355 |
| 1925—26 | 3,68,758 | 5,08,870 | 8,77,628 |
| 1926—27 | 5,15,547 | 5,57,474 | 10,73,021 |

1926—27 கதர் விற்பனையட்டும் பின் வருமாறு பிரித்துக் கணக்கிடப் பட்டுள்ளது:

| | | |
|---|---|---|
| அ. பா. ச. சங்கக் கடைகளின் சில்லறை விற்பனை | ரூபா | 4,15,559 |
| சொந்த நிலையங்களின் ,, | ,, | 1,29,586 |
| அத்தாட்சிப் பத்திரமற்ற வியாபாரிகளிடம் விற்றது | ,, | 1,13,506 |
| ஏனைய மாகாணங்களுக்கு அனுப்பிய கதர் விற்பனை | ,, | 3,79,535 |
| அக்கரை வியாபாரம் | ,, | 34,835 |
| ஆகமொத்தம் | ரூபா | 10,73,021 |

அநேகமாகப் பத்தில் ஏழுபங்கு விற்பனை தமிழ்நாட்டிலும், மூன்றுபங்கு வெளிநாடுகள் அல்லது மாகாணங்களிலும் விற்பனை செய்யப் பெற்றன. அ. பா. ச. சங்கத்தார் வியாபார ஸ்தலங்களில் கதர் விற்பனை விசேஷமாக அதிகரித்துக்கொண்டே வருகிறது.

**தென்னிந்தியக் கதர்க் கண்காட்சி**—மகாத்மா காந்தியடிகளின் தென்னிந்திய விஜயத்தால் பெங்களூரில் ஒரு கதர்க் கண்காட்சி சாலையும், மகாநாடும் கூட்டப்பெற்றன. கதரபிவிருத்தியின் அவசியத்தையும், அதுவே தேசவிடுதலைக் காதாரமாயுள்ளதென்பதை மக்களுக் குணர்த்தவும், தொழிலாளிகளுக்கு அதில் உற்சாகத்தை யுண்டுபண்ணவும் இம்மகாநாடு கூட்டப்பெற்றதாகும். கதர் நல்ல அபிவிருத்தி யடைந்துவிட்டதென்பதைக் காட்டப் பலவித சித்திரவேலையுள்ள ஆடைகளும் அக்கண்காட்சி சாலையில் வைக்கப் பெற்றன. கைத்தொழில் நிபுணத்துவமுள்ள ஆடைகளும் ஆங்குக் காணப் பெற்றன. மகாநாடும் இறைவனருளால் திருப்திகரமாகவே நடந்தேறியது.

**கதர்நிதிக்குச் சேர்ந்த பொருள்**—மகாத்மா காந்தியடிகள் அவ்வாண்டின் ஆரம்பத்திலேயே சுற்றுப்பிரயாணந் தொடங்குவாரென எதிர்பார்க்கப் பெற்றது. அவருடைய தேக அசௌக்கியங்காரணமாக அவருடைய பிரயாணம் பலவாறு மாற்றப்பட்டுக் கடைசியாக அவ்வாண்டு ஆகஸ்டுமுதல் அக்டோபர் மாதம் முடிய அடிகள் தமது சுற்றுப் பிரயாணத்தைக் கொண்

டார். அதனால், தமிழ்நாடு, கேரளதேச முழுவதிலுமுள்ள ஒவ்வொரு முக்கிய ஸ்தானத்திற்கும் அவர் செல்லவியலாது போயிற்று. ஆனாலும் மொத்தம் கதர் நிதிக்கு ரூ. 1,63,000 வசூலாயிற்று.

கலாசாலைகளிலும் வேறு ஸ்தாபனங்களிலும் இராட்டைத் தொழில்- நகர பரிபாலன தாலூகா போர்டு பள்ளிக்கூடங்களின் இராட்டையில் நூற்றலை எவ்வளவுதூரம் அங்கங்குள்ளார் ஆதரித்து வருகின்றனரென்பதைப்பற்றிய கணக்கொன்றும் சரிவரக் கிடைத்திலது. நல்ல தொழிற்பழக்கமுள்ளவர்களின் உதவியின்மையால் பல விடங்களில் இராட்டைத் தொழில் விசேஷ விருத்தியடையவில்லை. குலசேகர பட்டினத்திலுள்ள பள்ளிக்கூடத்தில் கதர்நூல் நூற்பதில் நல்ல விருத்தியேற்பட்டுள்ளது. இப்பள்ளிக்கூடத்தில் நூற்று நெய்யப்பெற்ற ஆடையொன்று மகாத்மா காந்தியடிகளுக்குத் திருநெல்வேலியில் அளிக்கப்பெற்றது. அவர்கள் ஊக்கம் பாராட்டத்தக்கதாகும். தொண்டர்கள், தனிப்பட்ட கலாசாலைகளில் நல்ல கதரபிவிருத்தியின் பொருட்டுச் செய்துள்ள பிரசாரத்தால் பெரும்பயன் விளைந்துள்ளது. 'மிஸ் டுவீடில்' கலாசாலையில் சுமார் 40 இராட்டைகள் சுற்றுகின்றன. லாயல்லா கலாசாலையைச் சேர்ந்த திரு. மகாதேவன் அவ்விராட்டைகளை உபயோகிக்கும் முறைகளை நன்குபோதித்ததுமன்றி, இரண்டொருவருக்குப் பருத்தியைச் சுத்தஞ்செய்யும் விதத்தையும் கற்பித்துள்ளார். பருத்தியைச் சுத்தப்படுத்தும் வகையறியாவிடில், நூற்றலைச் சரிவர அனுஷ்டிக்க வியலாது. ஆதலின், எந்தக் கலாசாலையில் இராட்டைத்தொழில் ஆதரிக்கப்படுகின்றதோ அங்குப் பருத்தியைச் சுத்தஞ்செய்யும் வகையறிந்த இரண்டு மூன்று ஆசிரியர்களேனு மிருத்தல் அவசியம்.

சென்னை, மதுரை ஆகிய நகரங்களின் பரிபாலன கழகத்தினர், அங்கிகளுக்கும், ஏனைய உபயோகங்களுக்கும் கதரையே வாங்கி வருகின்றனர். சென்னை நகரபரிபாலன சபையார் சமீபத்தில் ரூ. 3000 த்துக்குக் கதருடைகளை வாங்கிப் பிச்சைக்காரர் நிலையத்திற்கும், பிறசெலவிற்கும் உபயோகித்தனர். அ. பா. ச. சங்கத்தார் முனிசிபாலிடியாருக்கும் ஏனைய நிர்வாக போர்டாருக்கும் வேண்டிய அளவு கதர் அளிக்க முயற்சியெடுத்துக்கொண்டுள்ளனர்.

இங்ஙனம் 1926—27 ஆண்டைய அகிலபாரத சர்க்கா சங்கத்தார் அறிக்கையை ஆதாரமாகக்கொண்டு மேற்கண்ட விஷயங்களைத் தொகுத்துக் கூறினோம். 'கதர் அபிவிருத்தி யடைந்துவிட்ட' தென நாம் இதனின்றும் கண்டு மகிழ்ச்சியடைந்து இனிக் கதர் வாங்குவதை விட்டுவிடாமலிருப்போமாக. மகாத்மா காந்தியடிகளின் திட்டப்படி கதர் இன்னும் முன்னேற்றமடையவில்லை யென்பதை நாமிங்குக் குறிப்பிடுவதும் அவசியம். கதருடுக்க எவ்வளவோபேர் மனப்பூர்வமாக இசைகின்றன ரென்பதில் ஐயமில்லை. ஆனால் தரிப்பது மட்டுமில்லை. பலர் 'கதர் வெயிற்காலத்தில் கசகசப்புள்ளதாயும், மழைக்காலத்தில் உலராததாயும், துவைத்தற்குக் கஷ்டமானதாயும் இருக்கின்றது' என்று சாக்குச்சொல்லிவிடுகின்றனர். மற்ற விஷயங்களில் மெல்ல அபிப்பிராயபேதமென்றும், கட்சிக்கொள்கையென்றுங் கூறித் தப்பித்துக் கொள்ள முயலுபவர்கள் இக் கதர் விஷயத்தில் எவ்வித போக்குஞ் சொல்ல வியலாது. 'பத்திரிகைகளில் அவர்கள் எழுதிக்கொண்டே யிருக்கட்டும், தொண்டர்கள் பிரசாரஞ் செய்யட்டும், நாம் நமது பழைய வழியிலேயே நடப்போம்' என்ற மனப்பான்மை இனி நமதுள்ளத்தைவிட்டுக் கடிதகல வேண்டும். பாரத அன்னையின் உள்ளம் அன்றே மகிழும்; நமக்கும் நல்வழியுண்டாம்.

தேசதாஸன்.






## வேதாந்த சார சங்கிரக வசனம்

(37-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஞானகுமாரா! இதுகாறும் சூட்சுமபிரபஞ்சத்தின் சொரூபம் நிரூபிக்கப்பட்டது. இனி ஸ்தூல பிரபஞ்சத்தின் தன்மையைக் கூறுகிறேன் கேட்பாயாக.

முற்கூறிய ஆகாசம் முதலிய சூட்சும பஞ்சபூதங்களே ஒன்றோடொன்று பஞ்சீகரணப்படுவதால் (கலப்பதால்) ஸ்தூல பஞ்சபூதங்களாகின்றன. அஃதெவ்வாறெனின்,

### பஞ்சீகரணம்.

ஆகாசம் வாயு தேயு அப்பு பிருதிவி என்னும் பூதங்களைந்தும் சமானமான இரண்டிரண்டு பாகங்களாகப் பிரிக்கப்படுகின்றன. இவ்வாறு பிரிக்கப்பட்ட பூதங்களில் முதல் ஒரு பூதத்தின் ஒரு பாதிபாகத்தை யெடுத்து அதனை நான்குபாகமாக்கி அந்த நான்குபாகத்தையும் மற்ற நான்கு பூதங்களில் தனித்தனியாக ஒவ்வொன்றினுடைய அரைப்பாகத்தோடும் சேர்க்க வேண்டும். இவ்வாறே மற்ற பூதங்களின் தனித்தனி அரைப்பாகங்களை யெடுத்து நன்னான்கு பாகமாக்கித் தன்னையொழிந்த மற்றைய பூதங்களுடன் ஒவ்வொருபாகத்தையும் சேர்த்தல் வேண்டும். இப்படிச் செய்வதால் ஒன்றோடொன்று கலப்புண்டாகிறது. இதுவே பஞ்சீகரணமாம்.

சீடன்:—சுவாமி! இதனை நன்கு விளக்குதல் வேண்டும்.

குரு:—ஆனால் கூறுகிறேன். கவனமாய்க் கேள்.

ஆகாசம் வாயு தேயு அப்பு பிருதிவி

இவையைந்தும் சூட்சும பஞ்சபூதங்களென்று வைத்துக்கொள்வோம். இவைகளில் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டு பாக மாக்குவோம்.

### ஒவ்வொன்றையும் இரண்டு பாகமாக்குதல்.

ஆகாசம். வாயு. தேயு. அப்பு. பிருதிவி.

இவற்றில் ஒவ்வொரு பூதத்தினுடைய ஒருபாகத்தை அப்படியே வைத்துவிட்டு மற்றொரு பாதி ஒவ்வொன்றையும் நன்னான்கு பாகமாக்குவோம்.

### ஒவ்வொரு பாதியை நன்னான்கு பாகமாக்குதல்.

ஆகாசம். வாயு. தேயு. அப்பு. பிருதிவி.

இப்பொழுது ஆகாசத்தின் நான்கு பாகத்தையும் எடுத்து வாயு தேயு அப்பு பிருதிவி என்னும் நான்கிற்கும், வாயுவின் நான்கு பாகத்தையு மெடுத்து ஆகாசம் தேயு அப்பு பிருதிவி என்னும் நான்கிற்கும், தேயுவின் நான்கு பாகத்தை ஆகாசம் வாயு அப்பு பிருதிவி என்னும் நான்கிற்கும், அப்புவின் நான்கு பாகத்தை ஆகாசம் வாயு தேயு பிருதிவி என்னும் நான்கிற்கும், பிருதிவியின் நான்கு பாகத்தை ஆகாசம் வாயு தேயு அப்பு என்னும் நான்கிற்கும் கொடுத்துவிடுவோம்.

### பஞ்சீகரண சக்கரம்.

| ஆ | வா | தே | அ | பி |
|---|---|---|---|---|
| வா | ஆ | ஆ | ஆ | ஆ |
| தே | தே | வா | வா | வா |
| அ | அ | அ | தே | தே |
| பிரு | பிரு | பிரு | பிரு | அ |

இதுவே பஞ்சீகரணக் கிரமமாம்.

(ஒவ்வொரு பூதத்தில் அவ்வைந்து பூதத்தைச் சேர்த்துச் செய்வதற்குப் பஞ்சீகரணம் என்று பெயர். பஞ்சீகரணம் செய்யப்படுகிறதற்குப் பஞ்சீகிருதம் என்று பெயர். ஆதலால் இப்பஞ்சீகரணம் செய்யப்பட்ட பூதங்கள் பஞ்சீகிருத பூதங்கள். பஞ்சீகரணம் செய்யப்படாத பூதங்க (சூட்சும பூதங்க) ளுக்கு அபஞ்சீகிருத பூதங்கள் என்று பெயராம்.)

### பூதகுணங்கள்.

இனி, இப்பூதங்களின் குணங்களைக் கூறுகிறேன்.

ஆகாசம்-சப்தகுணமுடையது.

(வாயுவிற்குச் சொந்தகுணம் பரிசம், அதனோடு தனக்குக் காரணமான ஆகாசத்தின் குணமும் அதனிடம் உள்ளது. காரணத்தின் குணம் காரியத்திலுமிருக்குமன்றோ? ஆகலின்)

வாயு-சப்தம் பரிசம் என்னு மிரண்டு குணங்களுடையது.

தேயு-(காரண குணங்களாகிய) சப்தஸ்பரிசங்களும் (சொந்த குணமான) ரூபமு முடையது.

அப்பு-(காரண குணங்களாகிய) சப்த ஸ்பரிச ரூபங்களும் (சொந்த குணமான) ரசகுணமு முடையது.

பிருதிவி-(காரண குணங்களாகிய) சப்த ஸ்பரிச ரூப ரசங்களும் (சொந்த குணமான) கந்தமு முடையது.

(எனவே ஆகாசம் சப்தத்தையும், வாயு சப்த ஸ்பரிசங்களையும், தேயு சப்த ஸ்பரிச ரூபங்களையும், அப்பு சப்த ஸ்பரிச ரூப ரசங்களையும், பிருதிவி சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களையும் உடையனவா மென்றறிக.)

## இந்திரிய சாமர்த்தியம்.

ஞானேந்திரியங்களில், சுரோத்திரம் (காது) ஆகாசாம்சமாகலின் அதன் குணமாகிய சப்தத்தைக் கிரகிக்கின்றது. துவக்கு (தோல்) வாயுவி னம்சமாகலின் அதன் குணமாகிய பரிசத்தைக் கிரகிக்கின்றது. சக்ஷு (கண்) தேயுவி னம்சமாகலின் அதன் குணமாகிய ரூபத்தைக் கிரகிக்கின் றது. சிங்குவை (நாக்கு) அப்புவி னம்சமாகலின் அதன் குணமாகிய சுவை (ருசி) யைக் கிரகிக்கின்றது. கிராணம் (மூக்கு) பிருதிவி னம்சமாகலின் அதன் குணமாகிய கந்தத்தைக் கிரகிக்கின்றது.

கர்மேந்திரியங்களில்,

வாக்கு ஆகாசாம்சமாகலின் சப்தத்தை உச்சரித்தலாகிய காரியத்தைச் செய்கின்றது. பாதம் வாயுவாம்சமாகலின் நடத்தல் ஓடுதலாகிய காரியத் தைச் செய்கின்றது. கைகள் தேயு வாம்சமாகலின் அக்கினியாதிகளைப் பூசிக் கின்றது. உபஸ்தம் (ஜலத்துவாரம்) அப்புவாம்சமாகலின் மூத்திராதிகளை விடுகின்றது. பாயுரு (மலத்துவாரம். இது குதம் எனவும் சொல்லப்படுகின் றது.) பிருதிவியாம்சமாகலின் கடினமான மலத்தை விடுதலாகிய காரியத் தைச் செய்கின்றது.

## இந்திரிய அதி தேவதைகள்.

சுரோத்திரத்திற்குத் திக்கும், துவக்கிந்திரியத்திற்கு வாயுவும், நேத்தி ரத்திற்குச் சூரியனும், நாக்கிற்கு வருணனும், மூக்கிற்கு அசுவினி தேவர் களும், வாக்கிற்கு அக்கினியும், கைகளுக்கு இந்திரனும், பாதங்களுக்குத் திரிவிக்ரமனும், பாயுருவிற்கு மிருத்துவும், உபஸ்தத்திற்குப் பிரஜாபதியும், மனத்திற்குச் சந்திரனும், புத்திக்கு பிரகஸ்பதியும், அகங்காரத்திற்கு ருத்திர னும், சித்தத்திற்கு க்ஷேத்ரக்ஞனும் அதிதேவதைகளாம்.

ஆகாசம் முதலியவற்றின் சத்துவாம்சத்தா லுண்டாக்கப்பட்டவர்க ளாகிய திக்கு முதலிய இந்தத் தேவதைகளெல்லாம் தத்தமக்குரிய இந்திரிய ஸ்தானங்களி லிருந்துகொண்டு பிராணிகளின் கர்மத்திற் கேற்றவாறு அவ் விந்திரியங்களை அனுக்கிரகித்துக்கொண்டும் நிக்கிரகித்துக்கொண்டும் இருக் கின்றனரென்றறிக. சகல கர்மங்களும் அனுபவிக்கப் படுவதற்குச் சரீரம், இந் திரியங்கள், பிராணன் முதலிய பஞ்சவாயுக்கள், அகங்காரம், அதிதேவதை கள் ஆகிய இவ்வைந்துமே காரணங்களா யிருக்கின்றன. கர்மத்திற் கேற்ற படி குணங்களுண்டாம். குணத்திற் கேற்றபடி மனம் பிரவர்த்திக்கும். மனத்தை யனுசரித்து ஞானேந்திரிய கர்மேந்திரியங்களால் புண்ணியமோ பாவமோ நிறைவேற்றப்படுகின்றது.

விஞ்ஞானமயகோசம்—ஞானேந்திரியங்களும் புத்தியும் சேர்ந்து விஞ் ஞானமயகோச மெனப்படும். நானே கர்த்தா என்னும் அபிமானத்தைக் கொண்டிருக்கும். சாட்சிமாத்திரமாக விளங்கும் ஆத்மவஸ்துவானது ஓர் மத்தியஸ்தனைப்போல யாதொரு காரியமும் செய்வதில்லை. காண்டல், கேட்

டல், கூறல், செய்தல், அனுபவித்தலாதிய காரியங்களைச் செய்வது அகங்காரமேயாகும். ஆத்மா இந்தச் சகல விகாரங்களையும் பார்த்துக்கொண்டு சாட்சிமாத்திரமாய்ப் பற்றற்று விளங்குகின்றது.

உலகத்தில் பிராணிகளால் செய்யப்படும் எல்லாக் காரியங்களையும் சூரியன் சாட்சி மாத்திரமாய்ப் பார்த்துக்கொண்டிருத்தல் போல பரமாத்மாவும் சகல கர்த்திருத்துவங்களுக்கும் சாக்ஷியே யன்றிக் கர்த்திருத்துவ போக்திருத்துவங்கள் அவனுக்கில்லை. அப்படியே பிரத்தியக் ஆத்மாவும் (கூடஸ்தன்) சூரியன்போல கிரியையற்றவனாய் இந்திரியங்களின் காரியங்களுக்குச் சாட்சியாய் விளங்குகிறான். பரதத்துவத்தின் இவ்வித தன்மையை யறியாமல் மாயையால் மோகிப்பிக்கப்பட்ட சித்தமுடையவர்களாய் இக்கர்த்திருத்துவ போக்திருத்துவங்களைப் பிரத்தியக் ஆத்மாவே செய்கின்றதென்று அவ்வாத்மாவின் மீது ஆரோபிக்கின்றார்கள்.

ஆகாயத்தில் சந்திரன் அசையாமலிருப்பினும் தூரத்திலுள்ள மேகம் ஓடுவதைப் பார்த்துச் சந்திரனே ஓடுகின்றானெனக் கருதுவதுபோல மூடர்கள் ஆத்மசொரூபத்தை விசாரித்தறியாமல் அனாத்மாவாகிய தேகேந்திரியங்களின் காரியங்களை ஆத்மாவினிடத்து ஆரோபிக்கின்றார்கள். (ஆத்மாவே செய்கின்றதென அறிகின்றார்கள்.)

(இந்த ஆத்ம அனாத்ம விவேகத்தைப் பின்னர் விரிவாகக் கூறுவேன். இப்பொழுது உலகசிருஷ்டியின் கிரமத்தைக் கூறுகிறேன் கேள்.)

## பிர்ம்மாண்ட சிருஷ்டி

ஈஸ்வரனுடைய சங்கற்பத்தினால் பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஆகாசம் முதலாகிய பூதங்களால் சராசரங்களோடு கூடிய இந்த ஸ்தூல பிரம்மாண்டமுண்டாயிற்று.

(தொடரும்) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## ஆனந்தபோதினி வாழ்த்து.

### ஆசிரிய விருத்தம்.

தண்ணுலவு கின்றமதி தினம்வளர்வ தென்னவிரி
  தரணிமிசை யெங்கு முலவிச்
சற்சனர்கள் விற்பனர்கள் பொற்புடைமை கற்பிலகு
  சாந்தகுண மாதர்கல்வி
எண்ணுலவு கின்றநல மாணவர்க டங்கட்
  கிதம்புரிந் தின்பமுதவி
யென்நாளு முண்மைபெறு பன்னூற் பயன்றுறவு
  மில்லறத் தரும வியல்பும்
பண்ணுலவு கின்றதமி ழின்பெருமை யும்பரம
  பக்திநிறை வேதாந்தமும்
பகரறிய ஞானமும் போதித்து நன்மார்க்க
  பண்புதரு செம்பொன் வடிவே
விண்ணுலவு கின்றகதி ருள்ளளவும் நின்பேர்
  விளங்கமகிழ் வேதுலங்க
மேதினியி லானந்த போதினிய தாய்வந்த
  மேன்மைதிகழ் தெள்ளமுதமே.

ச. சி. இராமய்யர், கடலாடி.



# வைணவம்

## 4. திருமழிசை யாழ்வார்.

இப்பெரியார் அவதரித்த ஸ்தலம் திருமழிசை. ஒருசமயம், அத்திரி, பிருகு, வசிஷ்டர், ஆங்கீரசர் முதலிய மகரிஷிகள், பிரமதேவரிடஞ் சென்று, தாங்கள் தவம் புரிவதற்குத் தங்களுக்கோர் தகுதியான க்ஷேத்திரத்தைத் தெரிவிக்குமாறு அவரை வேண்டினார்கள். அவர், பூமியின் சத்தெல்லாம் ஒருங்கே திரண்டுள்ள க்ஷேத்திரம் எதுவென்று தமக்குள் யோசித்துப் பார்க்கையில், மகிசார க்ஷேத்திரத்தின் ஞாபகம் அவருக்கு உதயமாயிற்று. (மகி—பூமி; சாரம்—சத்து.) (மகிசாரம் என்னும் வடமொழி தமிழில் மழிசை என வழங்கப்பெற்று வருகிறது.) இந்த மழிசையம்பதியையும், பூமியின் மற்ற பாகத்தையும் அந்தப் பிரமமூர்த்தி தமது ஞானமாகிற தராசினிடம் வைத்து நிறுத்துப் பார்க்க, மழிசையே கனத்திருக்கக்கண்டு, அதை யவர் மகரிஷிகளுக்குத் தெரிவித்தார். ஆகையால் இந்த க்ஷேத்திரம் மிகவும் உத்தமமான தொன்றாயிற்று.

இந்த க்ஷேத்திரத்தின் மேற்பாகத்தில், கொஞ்சதூரத்திலிருக்கிற விதேக வனத்தில், பார்க்கவ மகரிஷி ஸ்ரீமந் நாராயணனைக் குறித்து, தீர்க்கசத்ர யாகஞ் செய்துகொண்டிருந்தார். இந்திரன் இந்த யாகத்தைப் பங்கஞ் செய்து வரும்படி தேவதாசிகளில் அதிசுந்தரவதியான கனகாங்கி யென்பாளொருத்தியை மகரிஷியிடம் அனுப்ப, அந்த மகரிஷி கனகாங்கியை நேசித்து ஒரு புத்திரனைப் பெற்றார். இப்புத்திரன் எவ்வித உறுப்பும் விளக்கமாகத் தோன்றாதபடி, வெறும் பிண்டாகாரமாய், துவாபரயுகம் 8,62,901-ல் நிகழ்ந்த சித்தார்த்திஹு, தைமீ, கிருஷ்ணபட்சம், பிரதமை, பானுவாரங் கூடிய மகநட்சத்திரத்தில் உதித்ததுகண்டு, பார்க்கவரும் கனகாங்கியும், இப்பிண்டத்தை யாதரியாமல், ஒரு பிரப்பம் புதரின்கீழ் எறிந்துவிட்டுப் போய்விட்டார்கள்.

ஜெகன்மாதாவான மகாலக்ஷ்மி இந்தப் பிண்டத்தைக் கடாக்ஷித்தருள, இது நாளடைவில் எல்லா அவயவங்களும் விளங்கப்பெற்று ஓர் பச்சிளங் குழந்தையாய் அழத்தொடங்கிற்று. மழிசைப்பதியில் கோயில்கொண்டுள்ள பகவான் இக்குழந்தை முன் தோன்றிக் கடாக்ஷிக்க, இதன் அழுகை நின்றுவிட்டது. பகவான் மறைந்ததும் குழந்தை மீண்டும் ரோதனஞ் செய்தது. இச்சந்தர்ப்பத்தில், திருவாளனென்பானொருவன், பிரம்பறுக்கும் பொருட்டு அப்புதரினிடம் வந்தான். வந்தவன் குழந்தையைக்கண்டு, ஆனந்தங்கொண்டு, அதை எடுத்துக்கொண்டுபோய்த் தன் மனையாளான பங்கயச் செல்வியிடங் கொடுத்தான். புத்திரப்பேறின்றி வருத்தமுற்றிருந்த அவள், தனத்தைக் கண்ட தரித்திரனைப்போல் சந்தோஷசாகரத்தில் மூழ்கி, அக்குழந்தையை

அன்புட னேற்றுக்கொண்டு, பார்ப்பவர், 'இவள் இக் குழந்தையைத் தத்துக் கொண்டாள் கொலோ, தானே பெற்றாள் கொலோ' என்று அதிசயிக்கும் படி, சீராட்டிப் பாராட்டி வளர்த்துவந்தாள். பங்கயச் செல்விக்குப் பகவத் கிருபையால் அவளுடைய ஸ்தனங்களில் பால் சுரக்கத் தொடங்கிற்று. குழந்தை இப்பாலை அருந்தாமலே அதுமுதல் அழாமலும், மல ஜலாதிக ளில்லாமலும், சுகவளர்ச்சியில் தளராமலு மிருந்துவந்தது.

இவ்விசித்திரத்தைக் கேள்வியுற்ற அவ்வூராரில் ஒருவனும், நான்காம் வருணத்திற் பிறந்தவனும், பிள்ளையில்லாதவனும் ஆகிய ஒரு கிழவன் அக் குழந்தையின்மீது பேரன்புகொண்டு நாள்தோறும் பயபக்தி விசுவாசத் துடன், பசும்பால் வாங்கி, அதைப் பக்குவமாகக் காய்ச்சி எடுத்துக்கொண்டு தன் மனைவி சகிதமாய்வந்து அப்பாலை யருந்தும்படி பிரிய வசனங்களால் குழந்தையை வேண்டிக்கொள்வான்; குழந்தை அதனை மகிழ்ச்சியோ டருந்தி வந்தது.

இப்படிப் பலநாள் நடந்துவர, ஒருநாள், இத்தம்பதிகளின் கருத்தறிந்து அத்தெய்வக்குழந்தை, தானருந்தும் பாலில் கொஞ்சம் மிச்சப்படுத்தி, அவர் களை நோக்கி, "நீங்கள் இதனை யுட்கொண்டால் உங்களுக்கோ ரறிவறிந்த புத்திரன் பிறப்பான்; அவனால் சுகமடைவீர்கள்" என்று குறிப்பிக்க, அவர் களும் அவ்வாறேசெய்து விதுரரைப்போன்ற ஞானவானாகிய ஒரு குமார னைப் பெற்று, கணிகண்ணன் என்று அக்குமாரனுக்குப் பெயரிட்டு, சகல வித்தைகளிலும் தேர்ச்சிபெற வைத்தார்கள். நிற்க,

எம்பெருமானுடைய ஜாயமான கிருபாகடாக்ஷத்தைப் பெற்ற தெய் வீகக் குழந்தையும் ரிஷிபுத்ரருமான ஆழ்வார், எழுவயதிலேயே சகலமும் ஓதாதுணரும் வல்லமையைப் பெற்று, "இளைப்பினை யியக்க நீக்கி, யிருந்து முன்னிமையைக் கூட்டி, யளப்பிலைம் புலனடக்கி" இயம நியமமாதி அஷ் டாங்க யோகம்புரிய இச்சைகொண்டார். இதற்கு ஸர்வஜகத்காரணத்வமும், ஸர்வரக்ஷகத்வமும், மோக்ஷப்ரதத்வமும் கொண்டுள்ள பரப்பிரம வஸ்துவை யுள்ளபடி யறிந்து தியானத்திற்கு விஷயமாக்கவேண்டுமென்று சாத்வீக சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

பரம்பிரம்மத்திற்கு ஸர்வஜகத்காரணத்வமாவது, எல்லாம் இறுதியுற் றுத் தன்னிலடங்கிய காலத்துத் தானொன்றிலும் அடங்காது எஞ்சிநின்று சிருஷ்டி காலம் வந்ததும், சேதனசேதனங்களான யாவும் உண்டாவதற்குத் தானே முதற்காரணமா யிருப்பதாம். ஸர்வரக்ஷகத்வ மென்பது சிருஷ்டிக் கப்பட்ட ஜீவான்மாக்கள் முத்தியின்பம் பெறுவதற்கு அவரவர்கட்குள்ள தடையை யொழித்து விருப்பத்தை யளித்து, நன்னெறியில் நிறுத்திக் காத்த லாம். மோக்ஷப்ரதத்வமாவது, நன்னெறியில் நின்ற அவ்வான்மாக்களுக்கு நிரதிசயப் பேரின்பப்பேற்றை யளிப்பதாம்.

இவ்வாற்றலைக்கொண்ட அவ்வஸ்துவை நாடிய திருமழிசை யாழ்வார், பகவானுடைய சங்கல்பத்தின்படி பல சமயங்களிலும் ஒன்றன்பின் ஒன்றாக

நுழைந்து, பிரம்மலக்ஷணத்தைப் பேசும் விஷயத்தில் அந்தந்தச் சமயத்தார் கொண்டுள்ள கொள்கைகளை அவரவர் கூறும் வண்ணமே அனுசரித்துப் பார்த்தார். அவையாவும் தமதறிவுக்குப் பொருத்தமானவையாகப் புலப் படாமையால் அவற்றைவிட்டுச் சைவமதப்பற்றில் தலையிட்டு, சிவவாக்கியர் என்னும் பெயருடன் வாழ்ந்து வரலானார்.

இப்படி இவர் சைவாபிமானராய்ப் பூசஞ்சாரம் செய்துவரும்போது திருமயிலையில் ஸ்ரீ வைஷ்ணவாக்ரேசரான பேயாழ்வாரைச் சந்தித்து, அவருடன் மதவிஷயமாகத் தர்க்கித்து, அவர் சொன்ன பரப்பிரம்ம லக்ஷணங்கள் சுருதி யுக்தி யனுபவங்களுக்கு ஒத்திருந்தமையாலும், தமது யோக திருஷ்டியால் விஷ்ணுவாக்ருதியே பரதத்வமா யிருக்கக்கண்டமையாலும் அவரால் திருத்தப்பெற்று, பஞ்சசமஸ்கார பூர்வகமாக ஸ்ரீ வைஷ்ணவராய், அவரையே தமது ஞானாசாரியராகவடைந்து, அவர் நியமனப்படி யொழுகி வந்தார்.

பிறகு திருமழிசையார், பேயாழ்வாருடைய அனுமதி பெற்றுத் திருமழிசைக் கெழுந்தருளி அங்கே கஜேந்திர சரஸின்தீரத்தில் யோகத்திலிருந்தார். அப்போது ஆகாயவீதியில், ரிஷபவாகனத்தில் பார்வதி சகிதமாகப் போய்க்கொண்டிருந்த சிவபிரான் யோகத்திலிருக்கும் ஆழ்வாரைக்கண்டு அவரது திடமான பக்திக்கு வியந்து அவருக்குப் பக்திசாரர் என்னும் சிறப்புப்பெயரைக் கொடுத்துப் போயினர். அதன்பின் சுக்திஹாரன் என்கிற கேசரன் ஆழ்வாரிடம்வந்து அவருடைய மகிமையைப்பார்த்து அடைக்கலம் புக அவனை அவர் இருதார்த்தனாக்கி யருளினார். அப்பால் ஆழ்வார் மீண்டும் பூசஞ்சாரம் செய்துவந்து கச்சியம்பதியில், திருவெஃகாவில் எழுந்தருளி, சொன்னவண்ணஞ் செய்த பெருமாளைச் சேவித்து அங்கே யோகத்திலமர்ந்திருந்தார். இவ்விடத்தில் ஆழ்வாருடைய அனுக்கிரகத்தால் பிறந்து சிறப்புற்றிருந்த கணிகண்ணர் ஆழ்வாரை யடைந்து அவருக்குப் பணிவிடைசெய்துகொண்டிருக்கும் பாக்கியத்தைப் பெற்றார். இந்த சந்தர்ப்பத்தில் கச்சிப்பதியிலுள்ள தாசிக்கிழவி யொருத்தி ஆழ்வார் இருந்த இடத்திற்குத் தினந்தோறும் வந்து, 'உடைத்தலை சிக்கப்பெற்றால் கவலை களையலாமே' என்கிறபடி, அந்த இடத்தைச் சீத்தல், மெழுகல், கோலமிடல் முதலியவற்றால் அலங்காரஞ் செய்யுங் கைங்கரியத்தை மேற்கொண்டிருந்தாள். ஒருநாள் ஆழ்வார் அவளைக் கடாக்ஷித்து, "நீ இக்கைங்கரியஞ் செய்வதால் அடைய விரும்பும் பலன் என்ன ?" என்று கேட்டார். அதற்கந்தக் கிழவி, "சுவாமி! நான் விருத்தாப்பியத்தால் மிகவும் கஷ்டப்படுகிறேன். ஆதலால் யௌவனத்தை அபேக்ஷிக்கிறேன்" என்றாள். ஆழ்வார் அவளிஷ்டப்படி அவளுக்கு யௌவன பருவங் கைகூட அருள்புரிந்தார்.

இந்த அதிசயத்தைத் தாசியால் கேள்வியுற்ற பல்லவராயன் என்னும் அவ்வூர்க்கரசன், தானும் யௌவன திசையையடைய எண்ணங்கொண்டு, பிரதிதினமும் உபாதானார்த்தமாகத் தனது இல்லத்திற்குவரும் ஆழ்வாருடை

சிஷ்யரான கணிகண்ணரை யழைத்து, "உமது ஆசாரியரை நான் சேவிக்கக் காதலுற்றிருக்கிறேன். அவரை இங்கு அழைத்து வரவேண்டும்" என்றான். "நமதாசாரியர் ஒருவரகத்துக்கும் எழுந்தருளாரே! அரசராயிருப்பினும் கணிசித்துப்பாராரே! 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்பதை நீர் கேட்டதில்லையா?" என்றார் கணிகண்ணர். அதன்மேல் வேந்தன், கணிகண்ணரை நோக்கி, "நீரேனும் நம்மீது ஒரு கவிபாட வேண்டும்" என்றான். அதற்கவர், "நாக்கொண்டு மானிடம் பாடேன்; வாய்க்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்" என்றார். அதன்மேலும் அரசன் அவரை நிர்ப்பந்திக்க, அவர், "ஆடவர்க ளெங்ஙனகல்வா ரருள்சுரந்து, பாடகமு மூரகமும் பாம்பணையும்-நீடியமால், நின்று னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ, மன்றார் பொழிற்கச்சி மாண்பு" என்றார். அரசன் கோபங்கொண்டு, "நம்மைப் பாடும்படி கேட்டால் நீர் நமது ஊரையும் தெய்வத்தையும் பாடினீர். ஆகையால் இந்த க்ஷணமே நீர் நமது ராஜ்யத்தினின்றும் போய்விட வேண்டும்" என்று கட்டளை யிட்டான்.

கணிகண்ணர் இதனைத் தமது ஆசாரியருக் கறிவித்து, 'அடியேனுக்கு விடைதந்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார். ஆழ்வார், "நீர் போம் போது நாமும் இங்கிரோம், எம்பெருமானும் இங்குக் கண்வளர்ந்தருளான்" என்று சொல்லி, பகவானுடைய சந்நிதானஞ் சென்று,

> "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
> மணிவண்ணா நீகிடக்க வேண்டா-துணிவுடைய
> செந்நாப் புலவனியான் செல்கின்றேன் நீயுமுன்றன்
> பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"

என்று விண்ணப்பித்தார்.

ஆழ்வார் சொன்ன வண்ணமே பகவான் பாம்பணையைச் சுருட்டிக் கொண்டு பின்தொடர ஆழ்வாரும் கணிகண்ணரும் ஊரைவிட்டுப் புறப்பட்டனர்; இவர்களுடன் அவ்வூரிலுள்ள சகல தேவதைகளும் புறப்பட்டுவிட்டன. அந்த நகரம் பொலிவிழந்து இருளடைந்தது; அரசனும் மந்திரியுமிவ்வற்புதத்தைக் கண்டு, பயங்கொண்டு ஓடோடி வந்து, 'ஓரிரவிருக்கை' என்னும் கிராமத்தில் கணிகண்ணரின் திருவடியில் வீழ்ந்து தங்கள் குற்றத்தை க்ஷமிக்கும்படி அவரை வேண்டிக் கொண்டனர்; கணிகண்ணர் அவர்கள்பால் மனமிரங்கி முன்போலெழுந்தருள ஆழ்வாரை வேண்ட, ஆழ்வாரும் பகவானை வேண்ட, யாவரும் முன்போலவே திருவெஃகாவிற் குடி புகுந்தருளினர். இவர்கள் ஒரு இராத்திரி தங்கிய கிராமம், 'ஓரிரவிருக்கை' என்னும்பேர்பெற்று இன்றும் அப்பேருடன் விளங்கிவருகின்றது.

அனந்தரம், ஆழ்வார் திருக்குடந்தைக்குப் புறப்பட, வழியில் பெரும்புலியூர் என்னும் கிராமத்தில், ஒரு வீதியில், ஓர் திண்ணைமீது சிறிது நேரம் ஆயாசந்தீர உட்கார்ந்தார். அத்திண்ணையில் சில பிராமணர் வேதாத்யயனம்

பண்ணிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இவரைக்கண்டதும், சூத்திர ரென்றெண்ணி, அத்யயனஞ் செய்வதை நிறுத்தினர். இவர் உடனே அதைவிட்டுப் புறப்பட்டார். ஆழ்வார் புறப்பட்டதும் பிராமணர் அத்யயனத்தை ஆரம்பிக்க முயன்றனர்; ஆனால் அவர்களுக்கு விட்ட இடம் ஞாபகத்திற்கு வராமல் சஞ்சலப்படலானார்கள். ஆழ்வாரிதைக் கண்டு தரையிற் கிடந்த ஓர் கருப்பு நெல்லை எடுத்து நகத்தாற் கீறிக் காட்டினார். அவர்கள் அதனால், "க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நகநிர்பிந்நம்" என்ற விட்ட இடங் கண்டு அத்யயனஞ் செய்து ஆழ்வாரை மகானென்றறிந்து, தங்கள் குற்றத்தைப் பொறுத்தருளக் கேட்டுக் கொண்டார்கள். அந்தக் கிராமத்தில் ஆழ்வார் சில நாள்கள் வீதிதோறுஞ் சென்று உபாதானம் எடுத்துக்கொண்டிருந்தார். அக்காலத்தில் அவ்வூரில் கோயில் கொண்டுள்ள பகவான் ஆழ்வார் நடையாடும் பக்கமெல்லாம் முகங்காட்டிக் கொண்டிருந்தார்.

இதனைக் கண்ணுற்ற பெரும்புலியூரடிகள் அச்சமயம் தாம் செய்யும் யாகத்திற்கு ஆழ்வாரை யழைத்துவந்து தலைவராக்கினார். அது பொறாத சில பிராமணர் ஆழ்வாரைக் குறைகூற, ஆழ்வார் தமது இருதயத்துள்ள பகவானை நோக்கி,

> "அக்கரங்க ளக்கரங்க ளென்றுமாவ தென்கொலோ
> இக்குறும்பை நீக்கியென்னை யீசனுக்க வல்லையேல்
> சக்கரங்கொள் கையனே சடங்கர்வா யடங்கிட
> உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே"

என்று பாடி, அப்பகவானை யாவருக்கும் பிரத்தியட்சமாக்கி அசடர்களின் வாயை அடக்கியருளினார்.

பின்னர் ஆழ்வார் திருக்குடந்தைக் கெழுந்தருளி ஆராவமுதப் பெருமானைச் சேவித்து, அதன்பின் தாம் செய்தருளிய கிரந்தங்களை யெல்லாம் காவிரி நதியின் பிரவாகத்திலே விட்டுநிற்க, அவற்றில் திருச்சந்த விருத்தமும், நான் முகன் திருவந்தாதியும் எதிர்த்துவர, அவற்றை எடுத்துக்கொண்டு, மறுபடியும் ஆராவமுதனை வணங்கி, "காவிரிக்கரைக் குடந்தையிற், கிடந்தவாறெழுந்திருந்து பேசு..." என்று விண்ணப்பிக்க, ஆராவமுதன் தன் திருமுடியை நிமிர்த்தி யெழுந்திருக்கப் போகையில், அந்த சௌலப்பியத்தைக் கண்டு, "வாழி கேசனே" என்று மங்களாசாசனஞ் செய்தார். ஆயினும் ஆராவமுதப் பெருமான் ஆழ்வாருக்கு உத்தானசயனங் கொண்டு சேவை சாதிக்க, அந்த திவ்யமங்கள விக்கிரகத்தையே தியானம் பண்ணிக்கொண்டு யோகத்தில் இரண்டாயிரத்து மூந்நூறு வருஷம் அங்கெழுந்தருளி யிருந்து, இவ்வாறு திருமேனியுடனே அன்னாகார மின்றிப் பல மூலங்களில் சிறிது அமுது செய்தருளிக் கொண்டு விஷ்ணுதரிசன ஸ்தாபனாசார்யராய் 3,700வரு இந்த உலகிலிருந்து யாவரையும் வாழ்வித்தருளினார். சுபம்; சுபம்.

கோமளேஸ்வரன் பேட்டை, வித்வான். ம. இராஜகோபால பிள்ளை.

---



# புராதன சங்கீதம்.

(Registered)

(470-ம் பக்கத் தொடர்ச்சி.)

(உறையூர். ஸ்ரீ. வெ. வரதராஜய்யங்கார் எழுதியது.)

இவற்றுள்,

ஷட்ஜம் மயிலின் சப்தத்தை ஒத்திருக்கும். நாசி, கழுத்து, ஹிருதயம், தாடை, நாக்கு, பல் முதலான ஆறு அவயவங்களினின்றும் த்வனி ஆரம்பமாகின்றதனால் ஷட்ஜமென்று பெயர் பெற்றது.

ரிஷபம் சாக்ஷாத் பரமேஸ்வரனின் வாஹனமான (நந்தி) ரிஷபத்தின் குரலை யொத்திருப்பதால் ரிஷபமெனப் பெயர் பெற்றது.

காந்தாரம் ஆட்டின் குரலை யொத்திருக்கும். இந்த நாதம் மந்தரத்தினின்றும் புறப்படுவதா லிதற்குக் காந்தாரமெனப் பெயர் வரலாயிற்று.

மத்யமம் கிரௌஞ்சமென்ற பக்ஷியின் த்வனியை நிகர்க்கும். சப்தஸ்வரங்களில் ஸ, ரி, க இவைகளுக்குப் பின்னும், ப, த, நி இவற்றிற்கு முன்னும் மத்தியில் த்வனிப்பதால் மத்யமமென்று பெயர் பெற்றது.

பஞ்சமம் கோகில பக்ஷியின் சப்தத்தைப் போன்றிருக்கும். நாபி, மார்பு, ஹிருதயம், கண்டம், சிரசு ஆகிய ஐந்து இரேஹ ஸ்தானங்களின் மார்க்கமாய்ப் பிறப்பதால் பஞ்சமம் என்று பெயர் பெற்றது.

தைவதம் குதிரையின் கனைப்பை நிகர்த்திருப்பது; நாபியிலிருந்து புறப்பட்டு ஹிருதயம், கண்டம், சிரசு முதலான இடங்களின் வழியே வருவது.

நிஷாதம் யானையின் கர்ஜனை (த்வனி) யை ஒத்தது. ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம் ஆகிய ஆறு ஸ்வரங்களின் அம்சமும் இதனிடம் பொருந்தியிருக்கும்.

வேதகாலத்தில் இதேஸ்வரங்கள் ஆர்ச்சிகம் (ஒரு ஸ்வரம்) காதிகம் (இரண்டு ஸ்வரங்கள்) ஸாமிகம் (மூன்று ஸ்வரங்கள்) ஸ்வராந்தரம் (நான்கு ஸ்வரங்கள்) என்ற பிரிவிற்குட் பட்டிருந்ததாயும், பின்பு, 'வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி' என்றபடி சாக்ஷாத் ஈஸ்வரனிடத்திலிருந்து வடமொழி உபதேசம் பெற்ற பாணினி முனிவர் உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என்ற மூன்று ஸ்வரங்களினின்றும் மேலே குறிப்பிட்ட ஏழுஸ்வரங்களையும் உண்டாக்கினாரென்றும், உதாத்தத்திலிருந்து காந்தாரமும் நிஷாதமும், அநுதாத்தத்திலிருந்து, ரிஷபமும், தைவதமும், ஸ்வரிதத்திலிருந்து ஷட்ஜமும், மத்யமமும், பஞ்சமமும் தோன்றின வென்பதும் ஒரு பிரமாணம்.

## ஸ்வரஸம்யோகங்கள் *

| எண் | ஸ்வரங்கள் | சம்யோகங்கள் | எண் | ஸ்வரங்கள் | சம்யோகங்கள் |
|---|---|---|---|---|---|
| 1 | ஷட்ஜம் | 1. ஷட்ஜம் | 5 | பஞ்சமம் | 10. பஞ்சமம் |
| 2 | ரிஷபம் | 2. சுத்த ரிஷபம் | 6 | தைவதம் | 11. சுத்த தைவதம் |
| | | 3. சதுச்ருதி ,, | | | 12. சதுச்ருதி ,, |
| | | 4. ஷட்ச்ருதி ,, | | | 13. ஷட்ச்ருதி ,, |
| 3 | காந்தாரம் | 5. சுத்தகாந்தாரம் | | | |
| | | 6. சாதாரண ,, | 7 | நிஷாதம் | 14. சுத்த நிஷாதம் |
| | | 7. அந்தர ,, | | | 15. கைசிகீ ,, |
| 4 | மத்யமம் | 8. சுத்தமத்யமம் | | | 16. காகலீ ,, |
| | | 9. ப்ரதி ,, | | | |

ஷட்ஜம், பஞ்சமம் இரண்டும் தனித்தனியே வழங்கப்படுவன.

சுத்த ரிஷபம் (மேலே குறிப்பிட்டபடி) ரிஷபம் மூன்று பிரிவையுடையது. அதில் சுத்த ரிஷபம் முதற்பட்டதாதலால் சுத்தமெனப்பட்டது.

சதுச்ருதி ரிஷபம் ஸ்வர ஆரம்பமான ஷட்ஜத்திலிருந்து இது நான்காவது ஸ்ருதியாகையால் (சதுர் ஸ்ருதி) எனப்படும்.

ஷட்ச்ருதி ரிஷபம் ஸ விலிருந்து ஆறுவது (ஷட்) ஸ்ருதிஸ்தானமாகையால் ஷட்ச்ருதி ரிஷபம் எனப்படும்.

சுத்தகாந்தாரம் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்ட காந்தாரத்தில் இது முதல் காந்தாரமானதால் சுத்தகாந்தார மெனப்படும்.

சாதாரண காந்தாரம் ரிஷபத்வனியோடு இது சர்வசாதாரணமாகக் கலந்தொலிக்குந்தன்மையை யுடைத்தாதலின் இது சாதாரண காந்தார மெனப் பெயர் பெற்றது.

அந்தர காந்தாரம் சுத்தகாந்தாரமும், சாதாரண காந்தாரமும் ரிஷபத்துடன் கலந்து மொலிக்குந் தன்மையன. அந்தர காந்தாரமானது தனியே த்வனிக்கும் இயல்பினதாதலின் இதற்கு அந்தர காந்தாரமெனப் பெயர் ஏற்பட்டது.

சுத்த மத்யமம் மத்யம ஸ்ருதி இரண்டில் இது முதல் மத்யமமானபடியால் சுத்த மத்யமமெனப்படும்.

ப்ரதிமத்யமம் இது சுத்தமத்யம (முதல் மத்யம) த்தினின்றும் வேறுபட்டு நின்று த்வனிப்பதால் ப்ரதிமத்யமமென்று பெயர் பெற்றது.

சுத்த தைவதம் மூன்று தைவதஸ்தானங்களில் இது முதலாதலால் இதற்கு சுத்த தைவத மெனும் பெயர் ஏற்பட்டது.

சதுஸ்ருதி தைவதம் பஞ்சமஸ்ருதியிலிருந்து இது நான்காவது ஸ்தானத்தி லிருப்பதால் சதுஸ்ருதி (நான்கு) தைவதமெனப்படும்.

ஷட்ஸ்ருதி தைவதம் பஞ்சமஸ்தானத்திலிருந்து இது ஆறுவது நிலயத்திலிருப்பதால் ஷட் (ஆறு) ஸ்ருதி தைவத மெனப்படும். (தொடரும்).

* ராகசம்யோகத்தை வேறுவிதமாகப் பிரித்துக் கூறுவாருமுளர்.

# உத்தம நட்பும் போலி நட்பும்.

உத்தம நட்பாவது

> "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
> இடுக்கண் களைவதா நட்பு"

எனச் செந்நாப் போதார் திருவாய்மலர்ந்தருளிய வண்ணம் மனிதர் நண்பன் துயருழந்த விடத்துத் தாமே முற்பட்டின்னல் தவிர்த்தலும், புத்தி சிதைந்து மயக்கமுற்றுழி, நல்லறிவுறுத்தி நலம் நாட்டுதலும், அவனடையுமின்ப துன்பங்களிற் பங்குபெறலும், அவன் சுற்றத்தினரைத் தம் கேளிரெனக் கொள்ளுதலுமாம்.

ஒருவன் உலகில் மனமொத்த நண்பனைத் தன் சகோதரனினும் அதிக உறுதியாய்ப் பற்றுதலும், அந்தரங்க விடயங்களை யவனிட மொளியாதுரைத்தலும் சகஜம். உடன் பிறப்பை நம்பாத மனம் நண்பனை விசேடமாய் நம்புகின்றது.

> "உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டாம்
> உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
> மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
> அம்மருந்து போல்வாரு முண்டு"

என்னும் பாடலும் சகோதரர்களினும் சிநேகிதர்களே முக்கியமானவர்களென்பதை வலியுறுத்துகின்றது.

நல்லோர்தம் நன்னடக்கையும், சீரியகுணமும் புல்லர்கட்குப் புலப்படா; அறிவாளிகளோடு நட்புறவும், அவருடனின்சொற்புகன் றன்பு பெருக்கவும், ஆநந்த வாரிதியின் மூழ்கி அரிய நீதிகள் கேட் டளவளாவி அற்புதத் தேனினும், அதிமதுரக் கற்கண்டினும், அதிக ருசிவாய்ந்த மெய்யுபசாரமொழி கேட்டானந்திக்கவும் அவர் எவ்வளவு தூரத்திலிருப்பினும் அவரைத் தேடி மெய்யன்பர் வந்துவிடுவர். அவர் அத்யந்த விசுவாசத்துடனின்று நம் நண்பர் வருவாரென வெண்ணும் போதே அந்நண்பர் திடீரெனச் சந்திப்பதுண்டு. உத்தம நட்புக் கத்தகைய சக்தியுளது. இத்தன்மையான நட்பு வேரூன்றி முளைத்துக் கிளைத்து, நலம்பழுத்துப் பயன்றரும். பணச் செருக்கால் வரும் நட்பும், சனப்பெருக்காற்றரும் நட்பும் நட்பாகா. அந்நட்பு மின்னற்கு நேர். பணமும் ஜனமும் நழுவிய காலத்து அதுவும் பறந்துபோம். சமையத்துக் குதவாது. குணத்தாலும் கல்வி மணத்தாலும் பெறும் நட்பே சிறந்ததாகும். ஸ்ரீராமபிரான் விபீடணனுடன் நேசம் பாராட்டிய காலத்து, அவனது குணநலத்தையும் அறிவையும் நேரில் கண்டும், அநுமானல் கேட்டும் அகமகிழ்வுற்று மெய்யன்புபெருகி,

> "குகனொடு மைவ ரானே முன்புபின் குன்றுசூழ்வான்
> மகனொடு மறுவ ரானே மெம்முழை யன்பின்வந்த
> அகனமர் காத லைய நின்னொடு மெழுவ ராசேனம்
> *    *    *"

என்று ராம, பரத, லக்ஷ்மண, சத்துருக்கர் எனும் நால்வருடனும் குகன், சுக்ரீவன், விபீடணன் இம்மூவரும் சேர்ந்து ஆக எழு சகோதரர்கள் நாம்; ஆதலின் நீ எனது சகோதரனுயிருக்கக் கடவாயென்று தமது மெய்யன்பை விவரித்துள்ளார். விபீடணனும் ஸ்ரீ இராமர் பாதமே தஞ்சம் என நம்பி அவரது சுகதுக்கங்களைத் தன்னுடையனவாகப் பாவித்துத் தன் அண்ணனாகிய இராவணனிறந்த பின்னரும், ராகவருத்தரவின்மீதே ஈமக்கிரியையாதிகளை முடித்து, அவரருளுக்குப் பாத்திரனானன்.

விபீடணன் நல்லறிவுடையனா யிருந்தும், அவனமைச்சரே யன்றிச் சுற்றத்தினர் யாவரேனு மவனருங் குணத்தினை மெச்சி அவன் நட்பை யடைந்திலர். ஸ்ரீ ராகவரோ தசரத குமாரரே யெனினும், அவனிடத் தன்பு பெருகி நேசம் பாராட்டி அரக்கனென்றெண்ணு தார்வமுற்றனர். ஆதலின், நல்லார் கேண்மை நல்லாரடைவரே யன்றிப் புல்லர் உணரார்.

"தண்டா மரையி னுடன்பிறந்துந் தண்டே னுகரா மண்டூகம்
வண்டோ கானத் திடையிருந்து வந்தே கமல மதுவுண்ணும்
பண்டே பழகி யிருந்தாலு மறியார் புல்லர் நல்லோரைக்
கண்டே களித்தங் குறவாடித் தம்மிற் கலப்பர் கற்றோரே"

என்னும் பாடலும் அதனை விளக்கும்.

இனிப் போலி நட்பினை யாராய்வோம்:—

இரண்டு நண்பர்கள் பிரயாணம் செய்யுங் கால் வனத்திலெதிருற்ற கரடியைக் கண்டு ஒருவன் மற்றொருவனை அதனிடம் காட்டிக்கொடுத்துவிட்டு மரத்தின்மீதேறிக்கொள்ள, மற்றவன் சமயோசிதமாய்க் கீழேபடுத்துச் சவம்போற் கிடந்தான். அம்மிருகம் வந்து அவனை முகர்ந்து பார்த்துப் பிணமென்றிகழ்ந்துபோய்விட்டது. பின் மரமேறியவன் கீழிறங்கி அவ்விலங்கு நின்செவியிடை குசு குசுவென யாது புகன்றது என்றான். அதற்கவன் அந்தப் போலி நண்பன் வெட்குமாறு, "ஹே! நேசா!! என்சொல்வேன் அதனன்பை!

'செய்ந்நன்றி மறந்து, ஆபத்துக்காலத்தில் நின்னைவிட்டகன்று, தன்னை மட்டும் காப்பாற்றிக்கொள்ள நினைத்தோடும் அற்பநேயனைக் கனவிலும் நம்பாதொழி' என்று கூறிற்று" என்று விடை கூறினன் என்னும் ஒரு கதையுண்டு. இதுபோலி நட்பை விளக்கும். இத்தகைய போலிப் பொய்யன்புடைய புல்லர்களின் கண்ணிற் றென்படுதலும் கூடாது.

"கொம்புளதுக் கைந்துமுழங் குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி"

என்னும் நீதியை உய்த்துணர்தல் நன்று.

"நூறாண்டு பழகினு மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே"

"ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே"

என்னும் அதிவீர ராமபாண்டியரின் அரிய வாக்கியமும்,

"நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போற்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பில்லா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்
காக்கை யுகக்கும் பிணம்"

என்னும் முதுமொழியும் ஆராய்ந்து, எறிய பின் னேணியை வாங்கும் ஆபத்துக் காலத்தி லன்பற் றகலு மறிவில்லாவற்பர் சிநேகத்தை யறவே யொழித்து, உற்ற பந்துக்களல்லா விடினும் உத்தம நட்புள்ள உண்மையாளரையே நாடி மெய்யன்புறுதலே சாலச் சிறந்ததாகும்.

எல்லாம் வல்ல ஆதிமூல கேசவன் இன்னருள் சுரந்து நம்மெல்லோரையும் உத்தம நட்புடையாராய் விளங்க உதவிபுரிவாராக.

ச. சி. இராமய்யா, கடலாடி.




(33-ம் பக்கத் தொடர்ச்சி.)

## உலகஞானம்.

உலகஞானமென்பது உலகத்துக்குரிய விஷயங்களைத் தெரிந்துகொள்ளுதலாம்; ஆயினும் ஈண்டுக் கூறப்படுவது நீதிசாஸ்திரமே. இதனையே தமிழில் பொருட்பால் என்பர் பெரியார். வடமொழியில் அர்த்தம் என்பர். எனவே புருஷார்த்தம் நான்கனுள் (தர்மம், அர்த்தம், காமம், மோட்சம்) இது உலகத்துக்கு இன்றியமையாதது. அன்றியும் பொருள் இல்லாவிடில் தர்மகாமங்களெய்தப்பெறா. இம்மூன்றையும் அனுபவித்தொழியாவிடின் உலகப் பற்றறுத் தடையப்படுவதாகிய மோட்சம் அடையப்படுவதில்லை. தர்மகாமங்களுக்குச் சாதகமாய் நின்று மோட்சமார்க்கம் காட்டுவதே அர்த்தசாஸ்திரம். அதனாலேயே இந்த அர்த்தத்தைத் தர்மகாமங்களுக்கு இடையில் வைத்தார் பெரியார். தர்மத்தால் பொருள்சேரும்; அதனால் காமானுபவம் விருத்தியாகும். பொருளில்லாவிடில் அதற்காதாரமாகிய தர்மத்தைச் செய்ய முடியாது. ஆதலால் தர்மார்த்தங்கள் இரண்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தமுடையனவாயிருக்கின்றன. இவ்விரண்டும் கூடியே காமானுபவத்தைத்தரும். காமத்தையனுபவித்து நிராசையடைந்த மனம் பிறகு மோட்சத்தையே நாடும். ஆதலால் இம்மூன்றையும் அனுபவித் தொழித்தவனே மோட்சத்துக் குரியவனாவான். ஆதலால் அர்த்தசாத்திரமாகிய நீதிசாஸ்திரம் மோட்சத்துக்கும் ஆதாரமா யிருக்கின்றது. இக்கருத்துக்கொண்டே,

“ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.”

என்று பெரியார் கூறினார். ஆதலால் இந்த உலகஞானமாகிய அர்த்தசாஸ்திரத்தை அறிந்துகொள்ளவேண்டியது மனிதர்களுக்கு இன்றியமையாததொன்று. இது வடமொழியில் பிரமதேவர், வியாழபகவான், சுக்கிராசாரியார், தேவராஜன் முதலியவர்களால் விரித்துக் கூறப்பட்டது. பிரகஸ்பதிநீதி சுக்கிரநீதி என்பன உலகத்தில் பிரசித்தமானவையென்பது யாவரும் அறிந்த விஷயம். இவைகளின் சாரங்களைத் திரட்டி விதுரர் திருதராஷ்டிர மஹாராஜனுக்குக் கூறினார். ஆதலால் இது விதுரர் நீதியெனப்படும்.

இந்த நீதியை ஜனங்கள் அவசியந் தெரிந்துகொள்ளவேண்டு மாகையால் யாம் இதனை வெளியிடுகின்றோம்.

சுயஞானத்தாலும், முயற்சியாலும், பொறுமையாலும், தர்மத்தில் நிலைத்திருப்பதினாலும் தன்வாழ்வை இழக்காமலிருக்கிறவனே புத்திசாலி என்னப்படுவான். புகழத்தக்க காரியங்களைச் செய்தலும், தோஷமானவைகளை ஒழித்தலும், பக்தியும், வணக்கமும் ஆகிய இவைகள் புத்திசாலிகளுக்கு இலக்கணங்களாம். கோபம், மகிழ்ச்சி, கர்வம், அவமரியாதை, மயக்கம், அகங்காரம் இவைகளால் எவன் தன் பெருவாழ்வை யிழவாமலிருக்கிறானோ அவன் புத்திசாலியென்று பெரியோர்களால் கருதப்படுவான். (என்றால் இக்குணங்கள் வாழ்வை அழிக்குமாதலால் இவைகளை விலக்கியிருப்பவன் புத்திசாலியென்பது கருத்து). செய்ய நினைத்திருக்கும் காரியங்களையும், தீர்மானிக்கப்பட்ட மந்திராலோசனையையும் சத்துருக்கள் அறியாதபடி காப்பாற்றுகிறவனும், காரியம் செய்து முடிந்தபின் வெளிப்படுத்துகிறவனும் புத்திசாலியென்று மதிக்கப்படுகிறான், கருதப்பட்ட காரியங்கள் சீதோஷ்ண பயவிருப்பங்களாலும், வாழ்வு தாழ்வுகளாலும் கெடாமலிருக்கும்படி செய்கிறவனும் புத்திசாலியாம். ஒருவன் அறிவு ஆசையைவிட்டும், தர்மார்த்தங்களை அனுசரித்தும், இகபரங்களுக்கு விரோதமான இன்பங்களைவிட்டும் இருக்கிறதானால் அவனும் புத்திசாலியாம். தன் சக்திக்குத் தக்கபடி முயற்சிசெய்கிறவனும், தன் சக்திக்கு ஏற்ற காரியங்களைச் செய்கிறவனும், வியர்த்தமானவைகளை வெறுக்கிறவனும் புத்திசாலியாம். சீக்கிரத்தில் ஒன்றைத் தெரிந்துகொள்கிறவனும், பொறுமையோடு கேட்கிறவனும், ஆசையைவிட்டு விவேகத்துடன் தன்கருத்தை யோசிக்கிறவனும், தன்னைக் கேளாமலிருக்கும்போது பிறருடைய காரியங்களில் வீண்பிரயாசைப் படாமலிருக்கிறவனும் சிறந்த புத்திசாலியென்று கருதப்படுகிறான். அடையமுடியாதவைகளை அடைய வீணில் பிரயாசைப்படாமலிருக்கிறவனும், போனதைப்பற்றி வருந்தாமலிருக்கிறவனும், கஷ்டம்வந்தகாலத்தில் புத்திமயங்காமலிருக்கிறவனும் நல்ல அறிவுள்ளவனென்று மதிக்கப்படுகிறான். ஒரு காரியத்தைத் தொடங்கி அது முடிகிறவரையில் விடாமுயற்சியுடன் செய்கிறவனும், காலத்தை வீணாகக்கழிக்காமலிருக்கிறவனும், தன்னடக்கமுள்ளவனும் புத்திசாலியென்று கருதப்படுகிறான்.

சற்கருமங்களில் மகிழ்ச்சி யடைகிறவர்களும், தங்களுடைய சுகத்துக்கும் வாழ்வுக்கும் தகுந்தபடி காரியங்களைச் செய்கிறவர்களும், நன்மையானவைகளை வெறுக்காதவர்களுமான இவர்களும் புத்திசாலிகளாவர். பெருமையில் மகிழாதவனும், இழிவில் விசனப்படாதவனும், கங்கையில் குளிர்ச்சியாயும் கலங்காமலுமிருக்கிற மடுவைப்போன்றிருப்பவனும் புத்திசாலியாம். அரசனே! சகல பிராணிகளின் சுபாவத்தை உணர்ந்தவனும், எல்லாக் கர்மங்களின் சம்பந்தங்களையும் அறிந்தவனும், மனிதர்கள் தங்கள் எண்ணங்களை அடையக்கூடிய மார்க்கங்களை நன்றாயறிந்தவனும் புத்திசாலியாக மதிக்கப்படுகிறான். தைரியமாய்ப் பேசுகிறவனும், சகல விஷயங்களையும் நன்றாய்ப் பேசத் தெரிந்தவனும், தர்க்கமுறைகளை யறிந்தவனும், நல்லகுணத்தை யுடையவனும், சாஸ்திரங்களில் கூறப்பட்டவைகளுக்குச் சரியான பொருள் சொல்

கிறவனும் புத்திசாலியாம். காரணங்களுடன் முறையாய்ப் படித்தவனும், வேதத்தை அனுசரித்து நடக்கிறவனும், நல்லோர்களைத் தவறாமல் வணங்குகிறவனும் புத்திசாலியென்று சொல்லப்படுகிறான்.

வேதத்தை யுணராமலிருந்தும் செருக்குள்ளவனும், தரித்திரனாயிருந்தும் பெருமை பாராட்டுகிறவனும், பொருள் விருப்பமான தன் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்வதற்குத் தகுந்த காரணங்களைத் தேடுகிறவனும் மூடனெனப்படுவான். தன் காரியத்தைவிட்டுப் பிறர்காரியத்தில் சம்பந்தப்படுகிறவனும், சிநேகிதர்களிடத்தில் வஞ்சனையாக நடக்கிறவனும் மூடனென்று சொல்லப்படுவான். விரும்பத்தகாத பொருள்களை விரும்புகிறவனும், நியாயமாய் விரும்பத்தக்கவைகளை விலக்குகிறவனும், பலவானிடத்தில் பொறாமை கொள்கிறவனும் மூடனெனப்படுவான். தன் சத்துருவைச் சிநேகிதனாகக் கருதுகிறவனும், சிநேகிதர்களைப் பகைத்து வெறுக்கிறவனும், துர்க்கர்மங்களைச் செய்கிறவனும் மூடனென்று சொல்லப்படுகிறான். தன் எண்ணத்தை வெளிப்படுத்துகிறவனும், எல்லா விஷயங்களிலும் சந்தேகப்படுகிறவனும், சீக்கிரம் செய்யவேண்டிய காரியத்தைத் தாமதமாக நடத்துகிறவனும் மூடனாவான். பிதிர்ச்சிரார்த்தம் செய்யாதவனும், தேவாராதனை பண்ணாதவனும், நல்ல எண்ணமுள்ள சிநேகிதர்களுடன் கூடாதவனும் மூடனென்று சொல்லப்படுவான். அழைக்கப்படாத இடத்துக்குப் போகிறவனும், கேட்கப்படாமலிருக்கும்போதே அதிகமாகப் பேசுகிறவனும், நம்பத்தகாதவர்களை நம்புகிறவனும் மூடனெனப்படுவான். தான் குற்றமுள்ளவனாயிருக்கையில் பிறர்மேற் குற்றம் கூறுகிறவனும், பலமில்லாதவனாயிருந்தும் கோபத்துக்கு இடங் கொடுக்கிறவனும் பெரியமூடனென்று எண்ணப்படுகிறான். தன் பலத்தை யறியாமல் தர்மார்த்தங்களை விலக்குகிறவனும், செல்வத்தின் நிமித்தம் கடினமார்க்கத்தை எண்ணுகிறவனும், சரியானமார்க்கத்தை நாடாதவனும் மூடனாவான்.

அரசனே! தண்டிக்கத்தகாதவர்களைத் தண்டிக்கிறவனும், அறிவில்லாதவர்களை வணங்குகிறவனும், லோபியினிடத்தில் காத்துக்கொண்டிருக்கிறவனும் அற்பபுத்தியுள்ளவனென்று கூறப்படுவான். திரண்டசெல்வத்தையும், நல்ல வாழ்வையும், நிறைந்த கல்வியையும் உடையவனாய் அகந்தையில்லாதவன் புத்திமானாவான். திரண்ட செல்வமுடையவனாயிருந்தும், தன்னைச் சேர்ந்தவர்களுக்குப் பொருளைக் கொடாமல் தானே உண்டு உடுத்து மகிழ்கிறவனும் மூடனாவான். ஒரு மனிதன் குற்றம் செய்தால் அநேகர் அதன் பலனை அனுபவிக்கிறார்கள்; ஆயினும் குற்றம் செய்தவனே பாபத்தால் பீடிக்கப்படுகிறான். மற்றவர்கள் துன்பத்தினின்று தப்பித்துக்கொள்கிறார்கள். வில்லாளி ஒரு அம்பையெய்தால் அதனால் ஒருவனைக் கொல்லவும் கூடும், கொல்லாமலிருக்கவும் கூடும். ஒரு புத்தியுள்ளமனிதன் தன் புத்தியைப் பிரயோகித்து ஒரு இராஜ்யத்தை இராஜனோடுகூட நாசம்பண்ணிவிடுவான். ஏகமான அறிவினாலே நன்மைதீமைகளைப் பகுத்தறிந்து, சிநேகிதன், பலவான், பகைவன் ஆகிய மூவரைச் சாமதானபேததண்டங்களால் அடக்கி, ஐம்புலன்களை வென்று, சந்தி, விக்கிரகமாதிஷட்வர்க்கங்களை உணர்ந்து, ஸ்திரீகள், சூது, வேட்டை, கொடுஞ்சொல், குடி, கொடுந்தண்டனை, வீண்செலவு ஆகிய ஏழையும் விலக்கிச் சுகிக்கவேண்டும்.

விஷமும் ஆயுதமும் ஒருவனைக் கொல்லும். துஷ்டமந்திராலோசனையானது ஒரு இராஜ்யத்தை அரசன் குடிகளுடன் அழித்துவிடும். செல்வத்தை ஒருவனாகவே அனுபவிக்க எண்ணக்கூடாது. ஒன்றியாகப் பிரயாணம் செய்யக்கூடாது. பலர் தூங்குகிற இடத்தில் ஒருவன் விழித்துக்கொண்

டிருக்கக்கூடாது. மன்னிப்பதில் ஒரே ஒரு குறைவு இருக்கிறது. அது என்ன என்று கேட்டால் மன்னிக்கிறவனைப் பலமில்லாதவனென்று எல்லாரும் எண்ணுவார்கள். ஆயினும் அதைக் குறைவாக நினைக்கக்கூடாது. பொறுமையானது பரமசக்தியையுடையது. பொறுமை பலவீனர்களுக்குத் தர்மம்; பலவான்களுக்கு ஆபரணமாம். பொறுமை எல்லாரையும் வசப்படுத்துகிறது. பொறுமையால் ஆகாதது என்ன உண்டு? பொறுமையாகிய வாள் உடையவனைத் துஷ்டர்கள் என்ன செய்வார்கள்? புல்லில்லாததரையில் விழுந்த நெருப்புத் தானாகவே அணைந்துபோகிறது. பொறுமையில்லாதவன் பல பாதகங்களால் அசுத்தனாகிறான். நீதியானது சிறந்த நன்மைகளில் ஒன்று. பொறுமையானது மேலான சமாதானம். ஞானமே மேலான திருப்தி. தயவு ஒன்றே மேலானபாக்கியம். யுத்தத்தில் சக்தியில்லாத அரசன், ஸ்தலயாத்திரை செய்யாத பிராமணன் இவ்விருவரையும் வளைக்குள்ளிருக்கிற பிராணிகளைப் பாம்பு விழுங்குகிறதுபோலப் பூமி விழுங்கிவிடுகிறது. கொடுஞ்சொற் கூறாமலிருத்தல், துஷ்டர்களை அலக்ஷியம் செய்தல் இவ்விரண்டாலும் ஒருவன் உலகத்தில் புகழ்ச்சி பெறுவான்.

அரசனே! இப்போது சொல்லப்படுகிறவர்கள் தம் கருத்தை அடைவதில்லை. ஒரு ஸ்திரீ ஒருமனிதனைத் தான்மட்டும் நேசிக்கிறாள். அந்த மனிதனை மற்றப் பெண்களும் நேசிக்கிறார்கள். ஒருவன் மற்றொருவனை வணங்குகிறான். அவன் மற்றவர்களால் வணங்கப்படுகிறான். தரித்திரனுடைய ஆசை, சக்தியற்றவனுடைய கோபம் இவ்விரண்டும் முள்ளைப்போலச் சரீரத்தை வருத்தும். முயற்சியில்லாமலிருக்கிற கிருகஸ்தன், தந்திரமுள்ள யாசகன் இவ்விருவரும் ஒருபோதும் வாழ்வதில்லை. பொறுமையுடைய பலவான், தர்மமுள்ள ஏழையிவர்கள் சொர்க்கத்தைவிட மேலான பதவியில் வசிப்பார்கள். நன்மார்க்கங்களில் சம்பாதித்த பொருளைப் பாத்திரமல்லாதவர்களுக்குக் கொடுப்பதும், பாத்திரமானவர்களை விலக்குவதுமாகிய இவ்விரண்டும் பெருங்குற்றமாம். தானங்கொடாத தனவான், கர்வமுள்ளயாசகன் இவ்விருவரும் பாரத்தைக் கழுத்தில் கட்டிக்கொண்டு நீரில் விழுந்தவராவர். அரசனே! யோகத்தை நிறைவேற்றின யோகி, சண்டையில் எதிர்முகமாய் நின்று இறந்த போர்வீரன் இவ்விருவரும் சூரியமண்டலத்தைக் கிழித்துக்கொண்டு செல்வார்கள்.

பாரதோத்தமரே! வேதமுணர்ந்தவர்கள், "மனிதருடைய கருத்து உத்தமம், மத்திமம், அதமம் என்று மூவகைப்படும்; அதனால் மனிதர்களும் உத்தமர், மத்திமர், அதமர் என்று மூவகைப்படுவார்கள்" என்று சொல்கிறார்கள். அவர்கள் தங்களுக் கேற்ற தொழிலைச் செய்யவேண்டும். மனைவி, அடிமை, புத்திரன் இம்மூவரும் திரவியத்தைச் சொந்தமாக அடையத்தக்கவர்களல்ல. அவர்கள் என்ன சம்பாதித்தபோதிலும் அது அவர்களுடைய எஜமானர்களுக்குச் சொந்தம். பிறர்சொத்தைத் திருடுதல், அன்னியன் மனைவியைப் பலாத்காரம் செய்தல், சிநேகபேதஞ் செய்தலாகிய இம்மூன்றும் பெரிய பாபத்தை உண்டாக்கும். தன்னை அனுசரித்திருக்கிறவன், தன்னிடம் அடைக்கலம் புகுந்தவன், தன் வீட்டுக்கு வந்தவன் இம்மூவரையும் எப்படிப்பட்ட ஆபத்துக்காலத்திலேயும் கைவிடக்கூடாது. சத்துருவைத் துன்பத்தினின்றும் விடுவித்தல், இராஜ்யத்தை அடைதல், புத்திரனை அடைதல் இவை மூன்றும் ஒத்தவை. அரசன் பலவானாக இருந்தாலும் சிற்றறிவுள்ளவன், காலதாமதம் செய்கிறவன், சோம்பேறி, முகஸ்துதி பேசுகிறவன் இந்த நாலுபேர்களுடன் ஆலோசனை செய்யக்கூடாது.

(தொடரும்.) சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

# டெலிபோன் ஏற்பட்டவிதம்.

டெலிபோன், அலக்சாண்டர் கிரஹாம் பேல் என்பவரால் ஏற்படுத்தப் பட்டதாகும். உலகில் ஒரு பொருளைப் புதிதாக உண்டாக்கி பிரக்யாதிபெற்றவர்கள் ஒவ்வொருவரும் மற்றவர்கள் கண்டறிந்த நுட்பங்களைக் கொண்டே அப்பொருளைச் செய்திருக்கிறார்கள். மற்றவர்கள் தாங்கள் கண்டறிந்த நுட்பங்களைக்கொண்டு ஒரு பொருளைச் செய்து முடிப்பதற்கு அவர்களுக்குப் பொருளும், நேரமும் இல்லாதபடியால்தான் அவர்களால் அப்பொருள் முடிவுபெற்று அவர்களின் பெயர் வெளிப்படுவதில்லை ; ஒரு பொருளைச் செய்து முடித்து உலகத்தார் முன் காட்டுபவருக்குத்தான் கீர்த்தி ஏற்படுகிறது.

பெல், தாம் செய்த டெலிபோனின் அமைப்பை, ரிஜிஸ்தர் ஆபீசில் ரிஜிஸ்தர் செய்த தினத்தன்றே எலிஷாகிரே என்பாரும் அவரைப்போலவே தாக்கல் செய்தார். ஆனால் பின்னர், பெல்தாம் இந்த டெலிபோனைக் கண்டு பிடித்தாரென்பது தீர்மானிக்கப் பட்டது.

பெல், மனிதர் பேசுகையில் ஏற்படும் சப்தத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்பவர். அவர் முதன்முதலில் இவ்விதமான சப்தம் ஏற்படுவதற்குரிய நுட்பங்களைக் கண்டறிய அதிக சிரத்தை கொள்ளலானார். அவருடைய தகப்பனாரும், பாட்டனாரும் இவ்வாறே செய்தனர். அவர்கள் செவிடர்களுக்குக் கல்வி கற்பித்தனர்; திக்கிப்பேசியவர்களைத் திருத்தினர். இதிலிருந்து பெல், மனிதர்கள் பேசுகையில் ஏற்படும் சப்தம் காற்றில் பரந்து செல்வதையும், இன்னும் மற்ற நுட்பங்களையும் அறிந்து கொண்டார்.

பெல் ஸ்காட்லண்டில் பிறந்து இங்கிலாந்தில் கல்வி கற்றார். அவர், 16-வது வயதில் இந்தச் சப்தத்திற்குரிய நுட்பங்களை மற்றவர்களுக்கு எடுத்துரைக்கலானார். இந்தச் சமயத்தில் அவருக்கு தேக அசௌக்கியம் ஏற்பட்டபடியால் அவர், தம் பெற்றோர்களுடன் கனடா தேசத்திற்குச் சென்றார். அங்கிருந்து அவர் செவிடர்களாகவும் ஊமைகளாகவு முள்ளவர்களுக்குக் கல்வி கற்பிப்பதற்கு பாஸ்டன் நகருக்குச் சென்றார். அங்கு, ஒரு தனவானின் புத்திரனுக்குக் கல்வி புகட்டுவதற்கு ஏற்பாடாகி அவர் சாலம் என்னும் ஊரில் அந்த தனவானின் வீட்டில் வசிக்கச் சென்றார். அவ்வீட்டில் ஓர் அறையில் அவர் காந்தக் கருவியின் மூலமாக சப்தம் செல்லும்படி வேலைசெய்து வந்தார். இவ்வாறு அவர் மூன்று வருடகாலமாகச் செய்து வந்தார். தந்தியை அனுப்பும் கருவியைவிட மேலான ஒரு கருவியை உண்டாக்க அவர் முயற்சி செய்தார். மனிதர்கள் பேசுகையில் வெளிப்படும் சப்தத்தைக் கொண்டுபோகக் கூடிய ஒரு கருவியைத் தயாரிக்க அவர் விருப்பங்கொண்டார்.

தம்முடைய செவிட்டு மாணவர்களுடன் அவர் பழகியதனால் காதிலுள்ள அதிக மிருதுவான உறுப்புகளைத்தாக்கும் சப்தத்தைப்பற்றிப் பல விவரங்

கள் அறிந்துகொண்டார். காதைப்போல் இரும்பினால் இரண்டு கருவிகளைச் செய்து அவைகளை மின்சாரம் செல்லும் கம்பியின் இருமுனைகளிலும் அமைத்தார். மின்சாரம் செல்வதனால் ஏற்படும் சப்தம் இந்தக் கருவிகளின் வாய்ப்புறத்தில் வெளிப்பட்டது. இந்த முறையை அவர் பின்னும் கையாண்டு சப்தம் கொஞ்சம் தூரத்தில் செல்லும்படியாகச் செய்தார். இப்போது அவருக்கு வயது 28 ஆகியது. வாஷிங்டன் நகருக்குச் சென்றிருந்த போது அவர், மின்சார சம்பந்தமான விவகாரங்களை நன்கு அறிந்தவராகிய ஜோசப் என்ரி என்பாரிடத்தில் தாம் இம்மாதிரியாக முயற்சி செய்து வருவதைத் தெரிவித்தார். அதனை என்ரி அதிக கவனத்துடன் கேட்டு, பெல்லின் நோக்கத்தின்படி காரியம் ஈடேறுமென்று கூறினார். அப்போது பெல், "காந்த சக்தியைப்பற்றி எனக்குத் தகவல் அதிகமாகத் தெரியாது" என்று கூறினார். அதற்கு என்ரி, "அவைகளை நீங்கள் அறிந்துகொள்ளக் கூடும். புதிதாக ஒரு பொருளைச் செய்வதற்கு உங்களுக்கு எண்ணம் ஏற்பட்டிருக்கிறது" என்று கூறி அவருக்கு இன்னும் ஊக்கத்தை உண்டாக்கினார்.

தமக்குக் காரியம் கைகூடி வராததைப்பற்றிப் பல முறைகளில் மனச்சோர்வுகொண்ட பெல்லுக்கு ஊக்கம் உண்டாகும்படியாக இவ்வாறு பலர் நல்வார்த்தைகள் கூறியதனால் இவ்விஷயத்தில் மேன்மேலும் ஊக்கம் அதிகரித்தது. அவர் பாஸ்டன் நகருக்குச் சென்று வாடகைக்கு ஒரு அறை எடுத்துக்கொண்டு இரவும் பகலும் மின்சார சக்தியைப்பற்றி வாசித்து வந்தார். அவருக்கு உதவியாயிருந்த தாமஸ் வாட்சன் என்பவர் அதிக விசுவாசமான நண்பராயிருந்தார். அவர், டெலிபோன் கருவிகளைச் செய்வதில் பெல்லுக்கு அதிக உதவியா யிருந்தார்.

1875-ம் ஆண்டில் ஒரு தினத்தில் இந்த இரண்டு பேர்களும் ஒன்றுக்கு அடுத்தாற்போல் மற்றொன்றாக வுள்ள இரண்டு அறைகளில் தனித்தனியாக ஆராய்ச்சி செய்துகொண் டிருந்தனர். பெல், தம்முடைய அறையிலிருந்த காந்தக் கம்பியின் முனையின்மேல் சாய்ந்துகொண்டு ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கையில் இந்தக் கம்பியின் முனையில் ஒரு விதமான சப்தம் வெளிப்பட்டதைக் கேட்டார். உடனே அவர் பக்கத்து அறையிலிருந்த வாட்சனைக் கூப்பிட்டு, அவர் அறையிலிருந்த காந்தக் கம்பியின் முனைக்கு அருகில் முன்பு சப்தம் ஏற்படுத்தியதுபோல் இன்னொருமுறை ஏற்படுத்தும்படி கூறினார். அங்கு உண்டான சப்தம் இந்தக் கம்பிமூலமாக மறுபடியும் பெல்லுக்குக் கேட்டது. இவ்வாறு அவர் முடிவில், சப்தம் ஒரு கம்பி வழியாகச் சென்று மற்றொரு முனையில் கேட்கு மென்பதை ரூபித்துக் காட்டினார்.

இவ்வாறு சப்தத்தைக் கேட்டபோதிலும் வார்த்தைகளைக் கேட்க முடியவில்லை. ஆனபோதிலும் பெல் தம்முடைய முயற்சியை விட்டுவிடவில்லை. ஒருவிதமான சப்தத்தைக் கேட்கக்கூடுமானால் வேறொரு விதமான சப்தத்தையும் கேட்கக்கூடுமென்று பெல் கருத்துக் கொண்டவராய் பின்

னும் தம்முயற்சியில் கருத்தைச் செலுத்தலானார். அதன் பயனாக அவர் புதிதாக ஒரு கருவியைச் செய்து அதைக் காந்தம் செல்லும் கம்பியுடன் இணைத்து அக்கம்பியின் முனைகளில் ஒன்றை மூன்றாவது உப்பரிகையில் தம்முடைய அறையிலும் மற்றொரு முனையைத் தரையிலுள்ள ஒரு அறையிலும் அமைத்து வாட்சனை இந்த அறைக்கு அனுப்பினார். உடனே, பெல் "வாட்சன்! இங்கே வாருங்கள்" என்று கூறியதை வாட்சன் கேட்டு அதிக சந்தோஷத்துடன், "நீங்கள் என்னைக் கூப்பிட்டதை நான் கேட்டேன். நீங்கள் சொல்லிய வார்த்தைகளை நான் கேட்டேன்" என்று உரக்கச் சொல்லிக்கொண்டே உப்பரிகைக்கு ஓடினார். இவ்வாறு, பெல் மனிதர்கள் பேசுகையில் ஏற்படும் சப்தத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்ததனால் டெலிபோனைச் செய்தார்.

புதிதாக ஒரு பொருளைச் செய்பவர்கள், மேலே அதற்குச் செய்யவேண்டிய காரியத்தை பெல்லும் செய்யவேண்டியவரா யிருந்தார். அவர் டெலிபோன் செய்ததை ஜனங்களுக்கு எவ்வாறு தெரிவிப்பதென்பதைப் பற்றிக் கவலை கொள்ளலானார். வேறு சிலருக்கு அத்தொழிலைக் கற்றுக்கொடுக்கத் தொடங்கினார். மற்றவர்களுடன் கன்னிகை அப்பெல் என்னும் மாதும் இவரிடத்தில் இத்தொழிலைப் பயின்றார். இந்த மாதும் செவிடர்களுக்கும், ஊமைகளுக்கும் கல்வி கற்பிப்பதில் அதிக ஊக்கங்கொண்டவரா யிருந்தார். பெல்லுக்கும் இந்த மாதுக்கும் விவாகம் நிச்சயிக்கப்பட்டது. இந்தப் பெண்ணின் தகப்பனார் பெல் செய்த கருவியை ஜனங்களுக்குத் தெரிவிக்கத் தீர்மானித்துக்கொண்டார். அவர் முயற்சியினால், பிளடெல்பியா நகரில் நடைபெற்ற பொருட்காட்சியில் பெல் செய்த கருவி வைக்கப்பட்டது. அசந்தர்ப்பத்தால் இந்தக் காட்சிக்கு பெல் செல்லமுடியாதிருந்தது. அதனால் அவர் கன்னிகை அப்பெலையும், அவளுடைய தகப்பனாரையும் பிளடெல்பியாவுக்கு வழிக்கூட்டி அனுப்பினார். அப்போது தங்களுடன் வரும்படி அவரை அப்பெல் வற்புறுத்தினாள். அதன்மேல் அவரும் அவர்களுடன் சென்றார்.

இந்தக் காட்சியில் வைக்கப்பட்டிருந்த பொருள்களைப் பார்வையிட்டு அவைகளில் எவை மேலானவை என்பதைத் தீர்மானிப்பதற்கு நியமிக்கப்பட்டிருந்தவர்கள் டெலிபோன் வைக்கப்பட்டிருந்த இடத்திற்குச் சென்ற சமயத்தில் அதிக களைப்புடனும் பசியுடனு மிருந்தனர். அதை அவர்கள் ஒரு விளையாட்டுப் பொருளாகக் கருதி அந்த இடத்தைவிட்டுச் செல்லத் தொடங்கினர். அச்சமயத்தில், பாஸ்டனில் செவிடர்களுக்காக பெல் ஏற்படுத்தியிருந்த பாடசாலையை முன்னொரு காலத்தில் பார்வையிட்ட பிராசில் தேசத்து சக்ரவர்த்தி நடந்துகொண்டே அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தார். அங்கு அவர் பெல்லைக் கண்டு அவருடன் வார்த்தையாடி, டெலிபோன் செய்யப்பட்டிருப்பதை அறிந்து அதன் மூலம் பேசுவதைக் கேட்கத் தாம் விரும்புவதாகத் தெரிவித்தார். காதில் வைத்துக்கொள்ளும் குழலைச் சக்ரவர்த்தி தம்முடைய காதில் அணைத்துக்கொள்ள, கம்பியின் இன்னொரு முனையிலிருந்து பெல்லுக்கு உதவியா யிருந்தவர் பேசினார். உடனே சக்ரவர்த்தி, "அது பேசுகிறது" என்று கூறி அதிக ஆச்சரியமும், சந்தோஷமுமடைந்தார். அவருடன், வாஷிங்டன் நகரில் பெல்லை உற்சாகப் படுத்திய ஜோசப் என்ரியும், அட்லாண்டிக் மகாசமுத்திரத்தில் முதன்முதலில் தந்திக்கம்பி அமைத்த இன்ஜினியராகிய லார்ட் கெல்வினும் இருந்தனர். தாம் அமெரிக்காவில் கண்ட பொருள்களில் இந்த டெலிபோன்தான் அதிக அதிசயமான பொருளென்று லார்ட் கெல்வின் தீர்மானித்தார்.

# டெலிபோன் ஏற்பட்டவிதம்

அதிக பிரக்யாதிவாய்ந்த இவர்கள் இதைப் பாராட்டியதனால் இது இந்தக் காட்சியில் ஒரு மேலான பொருளாக விளங்கியது. ஆனால் ஆராய்ச்சி செய்பவர்கள் இதைப் பாராட்டியபோதிலும் வியாபாரிகள் அலட்சியம் செய்தார்கள். அவர்கள் இது ஒரு விளையாட்டுப் பொருளென்றும், காரியத்திற்கு உபயோகப்படாதென்றும் கூறினர்.

இந்த டெலிபோன் செய்யப்பட்டிருப்பதை ஜனங்களுக்குத் தெரிவிக்க பெல்லினிடத்தில் பணமில்லை; வியாபாரம் செய்வதற்குரிய முறைகளையும் அவர் அறியார். இவ்வாறிருந்தபோதிலும் அவர் இதைப்பற்றிப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்தார்; ஊரூராகச் சென்று இதைப்பற்றி உபந்நியாசம் செய்தார்.

1877-ம் ஆண்டு மேமாதத்தில் ஒருவர் இரண்டு டெலிபோன்களை வாடகைக்கு அமைத்து அவைகளை உபயோகப்படுத்திக்கொண்டு வந்தார். அதே ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் சுமார் எழுநூறு டெலிபோன்கள் உபயோகிக்கப்பட்டன. இந்த டெலிபோனை விற்பதற்குச் சிலர் ஒன்றாகச்சேர்ந்து ஒரு கம்பெனியாராக ஏற்பட்டனர். அவர்கள், இம்மாதிரியான டெலிபோன் செய்யும் உரிமையை 3 லட்சம் ரூபாவுக்கு விற்றுவிடுவதாக தந்திக் கம்பெனியாரிடத்தில் தெரிவித்தனர். அப்போது இந்தக் கம்பெனியாரின் தலைவர் இந்த டெலிபோனைப் பார்த்துவிட்டு, "உங்களுடைய விளையாட்டுப் பொருள் எங்களுக்குப் பிரயோசனப்படாது" என்று கூறிச் சிரித்தார்.

இந்தச் சமயத்தில் எடிசன் என்பார் புதுமாதிரியான பேசுவதற்குரிய கருவியை உண்டாக்கினார். தந்திக் கம்பெனியார் இந்தக் கருவியைப்பெற்று, அதன்மேல் தாங்கள் டெலிபோன் செய்வதற்கு பெல்லுக்குப் பணம் அளிக்காமலிருப்பதற்காக, எடிசன்தான் முதலில் டெலிபோன் செய்தவரென்று ரூபிக்க முயற்சிசெய்தனர். இவ்விஷயமாக ஒரு வருடகாலம் இந்த இரண்டு கம்பெனியாருக்கும் வழக்கு நடந்தது. முடிவில் பெல்தாம், முதலில் டெலிபோனைச் செய்ததாகத் தீர்மானம் செய்யப்பட்டது.

தற்காலத்தில் தந்திமூலமாகவும், கடிதமூலமாகவும், சங்கதிகளைத் தெரியப்படுத்துவதைவிட டெலிபோன் மூலமாகத்தான் அதிகமாகச் சங்கதிகள் தெரியப்படுத்தப்படுகின்றன. டெலிபோன் இப்போது சாதாரணமான ஒரு பொருளா யிருப்பதனால் அதன் மூலமாக எவ்வாறு செய்தி எட்டுகிறதென்பதை அறிந்துகொள்ள ஜனங்களில் பெரும்பாலார் முற்படுவதில்லை. ஜனங்களில் பெரும்பாலார்க்கு இந்தக் கருவியைப்பற்றி ஒன்றும் தெரியாது. பேசுவதற்குரிய கருவியிலுள்ள துவாரத்தினிடத்தில் வாயை அமைத்து ஒருவர் பேசினால் அந்தத்துவாரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் மெல்லிய இரும்புத் தகட்டின் வழியாக சப்தம் சென்று இன்னொரு முனையிலுள்ளவருக்குப் பேச்சு தெளிவாகக் கேட்கும். காந்த விசைக் கருவியுடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு செப்புக்கம்பி இந்தத் தகட்டுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. கம்பியால் இணைக்கப்படாத டெலிபோன் மூலமாக இப்போது சமாசாரம் பேசப்படுகிறது. ஆனால் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்ச் சாதாரண டெலிபோன் உண்டாக்கப்பட்டதிலிருந்துதான் உலகில் இவ்வகைக் கருவிகளுக்கு அதிக அபிவிருத்தி ஏற்பட்டது.

இராஜ வடிவேலு முதலியார்.

---

உ

சிவமயம்




## வாதவூரடிகள் ஞானோபதேசம் பெற்ற வரலாறு.

(13-ம் தொகுதி, 560-ம் பக்கத் தொடர்ச்சி)

### நந்திதேவர்-கணநாதர்.

43. உண்மையுரைத் திடநாமே யுபக்கிரமஞ் செயுங்காலை
வண்மையிது வெனவேறோர் விடயத்து மனமுய்த்தாய்
தண்மையின்மற் றிதனாலித் தாணியிலோர் பிறப்புற்றே
யண்மையினச் செல்வமனு பவித்துநமை யடைகென்றான்.
(திருப்பெரு-திருவவ. 39.)

44. என்றுசொல நடுநடுங்கி யென்செய்கே னெனக்கதறு
நன்றுதெரி கணநாதர் முகநோக்கி நம்பெருமா
னென்றும்வெரு வலைநாமே யுன்றலைமே லடிசூட்டிக்
கொன்றுமல மின்பநிலை கொளச்செய்வோ மெனப்புகன்றான். (,, ,, 40.)

* குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனாக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றனெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பாராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங்கைக் கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் றவனைப்பே ரியம்பக் கொண்டார்
இடருறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே.
(தனித்திருத் தாண்டகம். 11.)

### திருவாதவூரர்.

45. விடைகொண்டு பரமனருண் மேற்கொண்ட கணநாத
ருடைகொண்ட கடன்மடந்தை யுவப்பெய்த வாதவூர்
நடைகொண்ட சம்புபா தாசிருதர் நன்மையா
லடைகொண்ட திருவயிற்றி னங்குரிக்குங் கருவானார்.
(திருப்பெரு-திருவவ. 41.)

46. மதியமொரு பதுஞ்செல்ல மாமறைநூ றலையெடுப்ப
விதியமையு மாகமங்கண் மேன்மேலுங் களிசிறப்பத்
துதியமைபு ராணமெலாந் தொக்கொருங்கு கூத்தாடத்
திதியமைபல் பாடையுளுந் திராவிடமிக் குவப்பெய்த. (ஷை-ஷை 43.)

47. வெய்யவன்மூற் கோளனைத்தும் விரோதமிலா நிலைநிற்க
வையகமெல் லாம்பரந்து மந்தமா ருதமுலவக்
கையமையாக் குறும்பனைத்துங் களைந்துலகம் புரப்பவர்தஞ்
செய்யநெடுங் கோல்பொலியத் திருவவதா ரஞ்செய்தார். (ஷை-ஷை 47.)

---

* ஸ்ரீ ஆதிகைலாச மகாத்மியம், ஸ்ரீ மணிவாக்கிய சரித்திரத்தில் இவ் வாறு கூறப்படுகின்றது.

48. பிறையெனநா டொறும்வளர்ந்து பிறங்கியா வோருமெடுத்
தறைபதினு றகலையுளா லாரணமே யாகமமே
நிறைதருபு ராணமே நிகழ்த்திடுமற் றுளவனைத்துங்
குறையறக்கற் றுணர்ந்தாரெங் குடிமுழுது மடிமைகொள்வார்.
(திருப்பெரு-திருவவ. 62.)

49. மிக்கலையுஞ் செழுநீரு மதிக்கலையு மிலைக்குமவ
ரக்கலையந் தோளர்புலி யதட்கலையர் நல்லருளா
லொக்கலையும் பிறக்கலையு மொழிந்திடுமா சுமகலையு
மெக்கலையுங் கற்றுணர்ந்தா ரீரெட்டாண் டெல்லையினில்.
(திருவாதவூரர்புரா-மந்திரிச். 12.)

50. திருவமிகு குடிப்பிறந்த செயலானு மதர்வணநூ
லொருவவுணர்ந் தவரல்ல ருதனுலுங் கரிபரிதேர்
மருவவுகைத் தலுந்தெரிந்தார் தெரியாத வகையாதே
பருவமுறு வெமக்குமருள் பாலிக்கும் பெருந்தகையார்.
(திருப்பெருந்-திருவவ. 63.)

51. வேதமுத லெக்கலையு மேதினியி னுணர்வார்தம்
போதமொரு சங்கையுறிற் றிருவாத வூர்புகுந்து
நாதவெனத் தொழுதேத்தி நவின்றுதெளிந் தேகுவரேற்
சாதமிவர் கல்விநிலை யெவரளக்கத் தக்காரே. (ஷை-ஷை 64.)

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.

## சுருளிமலை.

நான் சென்ற சித்திரைமீ ஆனந்தபோதினி சஞ்சிகை 463-ம் பக்கத்தில், "சுருளி என்னும் சுரபிமாமலையின் மகத்துவம்" என்னும் வியாசத்தை வெளியிட்டதிலிருந்து பல நண்பர்கள், "சுருளியிலுள்ள மகிமைகளை நீர் நேரில் பார்த்தீரா?" என்று கடிதங்கள் எழுதிக் கேட்கின்றனர். ஆதலின், நான் நேரில் கண்டவற்றைத் தெரிவிக்கிறேன்.

அன்பர்காள்! இம்மலையில் யான் பிரதமத்தில் நேரில் பார்த்தவைகள்:- சுப்பிரமண்யர் ஆலயம், அதன்மேலிருந்துவிழும் தீர்த்தம், அத்தீர்த்தத்தில் விழும் இலை முதலிய சகல பதார்த்தங்களும் அழுகிக் கெட்டுப் போகாமல் கல்லாவது, இத்தீர்த்த உற்பத்தி, ஷை சுப்பிரமண்ய ராலயத்திற்குள் பசுவின் தனக் காம்புகளிலிருந்து தீர்த்தம் சொரிந்துகொண்டிருப்பது, ஷை ஆலயத்தின் கீழிருக்கும் கைலாயகுகை, மஸ்தான் குகை, அவர் சமாதி, இன்னும் தபம் செய்பவர்களுக்கேற்ற அனேக குகைகள், சன்யாசிகுகை, அக்குகையி லிருக்கும் விபூதிமகத்வம் ஆகியவைகளே. இவைகளையெல்லாம் நான் பார்த்துவிட்டு அப்புறம் ஓர் பாதையில் சென்றேன்; அங்கு விஸ்தீரணமான பாறை ஒன்றிருந்தது; அதன்மீது சென்று பார்த்தேன்; அதன்பக்கத்தில் அனேக தேன் கூண்டுகளும், மேலிருந்து ஒலியுடன் விழு மற்புதமான தீர்த்தமும் இருந்தன; அதற்கப்புறம் யான் போகவில்லை; திரும்பிவிட்டேன். இம்மலையில் யான் நேரில் பார்த்தவைகள் இவ்வளவுதான். மற்றவையெல்லாம் சொல்லத்தான் கேள்வி; யான் பார்த்ததில்லை. ஆனல் இம்மலை அதிக சிறப்பு வாய்ந்ததுபோலத்தான் தெரிகிறது. இதுநிற்க, வயல்பட்டியின் பக்கத்திலுள்ள நாகர்மலையின் விசேஷங்கள் யாவும் நன்ருகப் பார்த்திருக்கின்றேன். என் வியாசத்தில் குறையிருப்பின் அறிஞர் மன்னிக்க.

சே. இராமசாமி, வயல்பட்டி.




## மாதரும் குடும்பமும்.

(13-ம் தொகுதி 553-ம் பக்கத் தொடர்ச்சி)

ஸ்திரீகள் மிகவும் தவறான காரியங்களைச் செய்கின்றவர்களா யிருக்கக் கூடும். அறிவீனமாக விருக்கின்றனர் என்பது மெய்ம்மையே. இது பற்றியே பல தவறுகளைப் புரிகின்றனர். அப்படிச் செய்வதற்குக் காரணம் புருஷர்களே யாவர். பெண்களுக்குப் போதுமான கல்வியறிவில்லாமையே பிழைபுரிவதற்குப் பெருங்காரணமாகின்றது. மிக்க கல்வி கற்றோர்களும் பிழைபடுகின்றனரெனின் பேதைப் பெண்களைப் பற்றிப் பேசுவதென்ன? புருஷர் பெண்களுக்குப் போதிய கல்வி கற்பிக்கவேண்டும். மனத்தின் கோணலைப்போக்கி நேர்மையை யுண்டாக்குவது கல்வியே யன்றோ? எவ்வளவு அதிகமாகக் கல்வி கற்கின்றோமோ அவ்வளவதிகமாகவன்றோ அறிவு வளரும். கல்வி யில்லாதோர் கசடராவரென்பதைப் பேசவேண்டுமா? ஆதலின் கல்வி யறிவில்லாப் பெண்கள் தங்கள் அறியாமையின் காரணமாகத் தவறுகளைச் செய்யாமலிருத்தல் எவ்வாறு முடியும்?

அவ்வாறு பெண்கள் செய்யும் குற்றங்களுக்கு யார் காரண கர்த்தாக்கள் என்பதைச் சிறிது கருத்திலூன்றிச் சிந்தியுங்கள். நல்ல கல்வியும் இல்லை; உலகானுபவமுமில்லை; நற்புத்தி போதிக்கப் படவுமில்லை. ஆகவே, கல்வியில்லாத காரிகையருக்குக் கனிகரத்துடன் சாந்தமாக - அன்பாக - இனிய மொழிகளால் - நல்ல நீதிகளைப் புகட்டி - நற்புத்திகளைப் போதித்து-கற்பிலக்கணங்களைக் கழறி - கற்புடைக் காரிகையார் கதைகளைக் காட்டி - அவர்கள் மனதில் நன்கு பசுமரத்தாணிபோல் பதியச்செய்து - இவற்றின் மூலமாக அவர்களைத் திருத்தல்வேண்டும். பிறகு அவர்களிடத்துக் குற்றம் காணப்படின் - அது நியாயமான குற்றமாயிருப்பின் அக்குற்றத்தை அவர்களுக்கு நிதானமாக எடுத்துக்காட்டி - அது குற்றமா? குற்றமல்லவா? என்பதை அவர்களைக் கொண்டே - அவர்கள் வாக்கைக்கொண்டே - தப்பிதம் என்று சொல்லும்படி செய்து - பின்பு இத்தகைய தவறான காரியம் செய்யலாமா? என்று கேட்டால் - அப்பொழுது அவர்கள் அக்குற்றத்தை யுணர்ந்து நாணமடைவர். அச்சமயத்தில் பொறுமையுடன் இனியும் இவ்வாறு நடந்து கொண்டால் நீ துஷ்டப்பெண் - மூடப்பெண் - அறிவில்லாப்பெண் - எனப் பெயர் பெறுவாய். ஆகையால் இத்தகைய பிழைகள் உன்னிடம் உண்டாகாதபடி எச்சரிக்கையா யிருத்தல்வேண்டும் என்றிவ்வாறு அடிக்கடி புத்தி புகட்டிக்கொண்டுவரின் சில காலத்திற்குள் அவர்கள் சீர்திருத்தமடைவார்கள். அதனோடு அவர்கள் சில நல்ல நூல்களையும் வாசிக்கச் செய்யவேண்டும்.

இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயங்கள் இரண்டுண்டு. நன்னடக்கைக்கும் துர்நடக்கைக்கும் சகவாசமே காரணமாகலின், துஷ்ட சகவாசம் நேராதபடி பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். இனி மற்றொரு மிக மிக முக்கியமான விஷயம் யாதெனில், 'மருமகளுக்குக் கற்பிலக்கணம் கற்பித்துவிட்டு மாமியார் வியபிசாரம் செய்தது' போல் மனைவியர்க்கு நல்லொழுக்கங்களை நாத்தழும்பேற நாளும் கற்பித்துவிட்டு நாயகர் தீயொழுக்கங்களை மேற்கொண்டு ஒழுகாமல் எச்சரிக்கையோ டிருக்கவேண்டும். (இங்கு கணவருடைய தீயொழுக்கமென்றது:-கள்ளுண்ணல், களவாடல், பொய்ம்மொழி புகலல், அகாரணமாக, 'ஆண்டையின் கோபத்தைக்கிடாவின் மேற் காட்டியதுபோல' மனைவியரைக் கோபித்தல், இவையனைத்தினும் விசேஷமாக வியபிசாரம் செய்தல் முதலியனவாம்.)

இவ்வாறு சில காலம் செய்து அதனாலும் சீர்திருத்த மடையாவிடின், அவர்கள்மீது வெறுப்புக் கொள்வதுபோல் காட்டல் வேண்டும். சாதாரணமாகப் பெண்கள் எதை இழக்க நேரினும் நாயகரது அன்பை இழக்க உடன்படாராகலின், இதனால் அவர்களை நாம் வழிப்படும்படி செய்துவிடலாம். இந்தக் காரியம் செய்தால் நம் கணவருக்கு நம்மீது வெறுப்புண்டாகுமென்றறிந்தால், மீண்டும் அவர்கள் அக்காரியத்தைச் செய்யத் துணியார். இதனாலும் அவர்கள் நல்வழிப்படாராயின் அவர்களோடு சம்பாஷித்தலையகற்றவேண்டும். 'நீகுணவதியாவாய் என்றிருந்தேன்; எத்தனை புத்தி புகட்டினும் நீ நல்வழிப்பட வில்லை; நீ எனக்கு உதவாய்; ஆதலின் உன்மீது கொண்டிருந்த அன்பு மாறுபட்டது; இனி, உன்னுடன் பேசேன்' எனக் கூறிவிடின் நல்வழிப்படலாம். அப்படியும் கேளாவிடின் அடிக்காமலென்ன செய்வது ? எனின், இவ்வளவில் படியாதது அடியாலும் படியாது. ஆகையால் அடிப்பது பயன்தராது. நயத்தாலும், பயத்தாலும் சரிப்படுத்தி வாழ முயலவேண்டும்.

அன்பர்களே ! இந்த வியாசம் இத்துடன் முடிவுறுகிறது. இந்த, 'மாதரும் குடும்பமும்' என்னும் வியாசத்தால் நாமறிந்துகொள்ள வேண்டியது யாதெனின், மனிதர் கூட்டமாக ஒருவர்க்கொருவர் உதவிசெய்து வாழுமியல்புடையவரென்றும், அதன் பொருட்டே இல்லறம் சிறப்புடையதென்றும், இல்லறத்திற்கு ஆண் பெண் என்னும் இருபாலரும் இன்றியமையாதவரென்றும், இருபாலாரில் ஆண்கள் வெளிக்காரியங்களுக்கும் பெண்கள் வீட்டுக்காரியங்களுக்கும் உரியவர்களென்றும்,ஆகையால் அவர்களே இல்லறத்திற்குரியவையாய சுற்றந்தழால்,விருந்தோம்பல், அடக்கம், பொறுமை, சிக்கனம், பெரியோரை உபசரித்தல் முதலாய நற்குண நற்செய்கைகளையுடையோராயிருத்தல்வேண்டுமென்றும். அவ்வாறு இருத்தற்கு அவர்களுக்குக் கல்வி அவசியமென்றும், புருஷர் மாதரை இழிவாகக் கருதி நடத்தலாகாதென்றும், அவர்கள் குறைபாடுடையவர்களாயின் அவர்களை நற்போதனையால் சீர்ப்படுத்த வேண்டுமென்றும், இன்னோரன்ன பிறவும் அறியப்பெற்றும். ஆகவே,

இவ்வாறு நம் பெண்மக்களை நன்மார்க்கத்திற் பழக்கிப் பல துறைகளிலும் முன்னேற்றமடையச் செய்வோமாயின் நம் நாடு பண்டைய நிலைமையையெய்தும். இல்வாழ்க்கையும் நல்வாழ்க்கையாம். எங்கும் ஆனந்தம் பொங்கும். செல்வம் மல்கும். சந்தோஷமும், சமாதானமும் சந்ததம் மிளிரும். இறைவனருளும் எளிதில் எய்தும்.

பூ. ஸ்ரீநிவாஸன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---





## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(48-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "சூது விரும்பேல்"

"சூது—சூதாடுதலை, விரும்பேல்—(நீ எப்போதும்) விரும்பாதே" என்பது இதன்பொருள்.

மனிதரைக் கெடுத்துவிடும் தீயகாரியங்களில் சூது முதன்மை பெற்றதாகும். இதைக் கைக்கொள்பவர், பல தீமைகளுக்குள்ளாவதோடு அவர்களுடைய குடும்பமும் அடியோடு கெட்டுவிடும். அவ்வாறு கெட்டவர்களின் கதை பலவுண்டு. அவற்றுள் ஒரு வாலிபனுடைய கதையை இங்குக் கூறுவாம் :—

ஒரு கிராமத்தில் தனவந்தரொருவ ரிருந்தார். அவருக்கு மிகுந்த ஐசுவரிய மிருந்தது; ஒரேபுத்திரன் பிறந்திருந்தான். அவன்பெயர் குமாரசாமி. அவன் பள்ளிக்கூடத்தில் படித்துவந்தான். ஆனால், அவனிடத்தில் நற்குணம் அமையவில்லை; கெட்டகுணங்களே விருத்தியாகிவந்தன. பலகெட்ட காரியங்களையும் அவன் செய்துகொண்டு வந்தான். அவற்றுள் சூதாட்டத்தை அதிகமாகக்கொண்டிருந்தான். அதனால் தினந்தோறும் பணந்தேடவேண்டியது அவனுக்கு முக்கியவேலையாயிருந்தது. அவன் சுயேச்சைபெறாத வாலிபனாயிருந்தபடியால் அவனுக்குப் பணம்கிடைப்பது அரிதாயிருந்தது. இதற்கென்ன செய்யலாமென்று அவன் யோசித்தான். வீட்டில், தாய் தந்தையர் வைக்கும் பணத்தைத் திருடுவதுதான் சரியான வழியென்று அவனுக்குத் தோன்றியது. அதன்மேல் அவன் தாய் தந்தையர் பணம் வைக்குமிடத்தைப் பார்த்துத் தினந்தோறும் அதைத் திருடிக்கொண்டுபோய்ச் சூதாடித் தோற்றுவந்தான். பணம் தினந்தோறும் காணாமற்போவதை அவன் தாய் தந்தையர் உணர்ந்து பணத்தை வெளியில் எங்கும் வைக்காமல் பெட்டியில் வைத்துப் பூட்ட ஆரம்பித்துவிட்டனர். பின்னர்க் குமாரசாமி வீட்டிலுள்ள பாத்திர பண்டங்களைத் திருடிவிற்றுப் பணந்தேடிச் சூதாடிவந்தான். அவன் தாய் தந்தையர், பாத்திரங்கள் காணாமற்போவதைப்பற்றிச் சந்தேகித்து வீட்டிலிருந்த பொருள்களை அறைவீடுகளில் போட்டுப் பூட்டிவைக்க ஆரம்பித்தார்கள். அதன்மேல் குமாரசாமி தாய்தந்தையர் அணிந்திருக்கும் நகைகளைத் திருட ஆரம்பித்து, அவர்கள் தூங்கும்போது ஒருநாள் தாயாரின் அட்டிகையைக் கழற்றிக்கொண்டு போய்விட்டான். நெடுநாட்களாக அவ்வீட்டில் பல திருட்டுக்கள் நடந்துவரவே அவனுடைய தாய் தந்தையர், அப்படித் திருடுகிறவனைப் பிடிக்கவேண்டுமென்று அக்காரியத்தில் மிக்க கவனஞ் செலுத்திக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கும்போது ஒருநாள் குமார

சாமி தன் தகப்பனார் தூங்கும்போது அவர் விரலில் அணிந்திருந்த வைர மோதிரத்தைக் கழற்றினான். உடனே அவர் விழித்து அவன் காதைப் பிடித்துக்கொண்டு, "பையலே! நீயா இங்குள்ளவற்றைத் திருடிக்கொண்டு வந்தாய்? உனக்கேனிந்தக் கெட்டபுத்தி! இதற்குமுன் காணாமற்போனவைகளையெல்லாம் நீதானே திருடினாய்?" என்று கேட்டார். அவன், "நான் திருடவில்லை" என்றான். அவர் கோபங்கொண்டு அவன் கன்னத்தில் இரண்டு அறை அறைந்து, "உள்ளதைக் கூறு" என்றார். அதன்மேல் அவன், "நான்தான் களவாடினேன்" என்று ஒப்புக்கொண்டான். அவர், "எதற்காகத் திருடினாய்?" என்று கேட்டார். அவன், சூதாடுவதை மறைத்துக்கொண்டு, "என் செலவுக்குப் பணம் வேண்டியிருந்தது; அதனால் நான் திருடினேன்" என்றான்.

அதன்மேல் அவர், "நீ என்னிடம் பணம் கேட்டால் நான் தரமாட்டேனா? இனிமேல் நீ திருட்டுவேலை செய்யாதே; ஒழுங்காயிரு" என்று புத்தி கூறி அவனை அனுப்பிவிட்டார். பின்னர் அவன் ஒருநாள் சூதாடிக்கொண்டிருக்கும்போது போலீஸ்காரர் அவனைக் கண்டுபிடித்து அவனுடைய தகப்பனார் பெரிய மனிதராயிருந்தபடியால், அவரிடம் அவன் செய்கையைத் தெரிவித்துவிட்டுப் பின்னர்ப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோகலாமென்று கருதி, அவரிடம் அழைத்துக்கொண்டுபோய் அவன் குற்றத்தைத் தெரிவித்தார்கள். அப்போதுதான் அவன் சூதாடியது அவருக்குத் தெரிந்தது. அவர் பெரிதும் வருந்திப் போலீஸ்காரருக்கு நல்வார்த்தைகூறி அவனை விடுதலை செய்துவிட்டு, அதன்மேல் அவன் நல்வழிக்குத் திரும்பமாட்டானென்று துணிந்து தம்முடைய சொத்துக்களையெல்லாம் அவனுக்குச் சேராதபடி தர்மத்திற் கெழுதி வைத்துவிட்டார். அவன் பிற்காலத்தில் பிழைக்க வழியின்றித் திருட்டும், சூதும் நடத்திப் பலமுறைகள் சிறைவாச தண்டனையடைந்து பெருந்துன்பமுற்று வருந்தினான்.

செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை

## அரிய பொருளுக்கே அதிக ஆபத்து.

திரண்ட செல்வமும், தீக்ஷண்ய புத்தியும், பக்தி சித்த வைராக்கியமும், நல்லொழுக்கமும், லக்ஷண தேகமும், சிறந்த பெற்றோரும், நல்ல மனைவியும் உடையவர்கள் அற்ப ஆயுள் வரம் பெற்று உலகில் ஜனிக்கிறார்கள். மூடபக்தியும், மிருக பலமும், கெட்ட எண்ணமும், துஷ்ட சகவாசமும், நீடித்த பிணியும், தொடுத்த வறுமையும் உடையவர்கள் உலகில், 'தரித்ரோ சதா யுசு' என்றபடி பல ஆண்டுகள் தொண்டு கிழமாகும் வரையில் அவஸ்தை, இடி பட்டு நீண்ட ஆயுள் வரம் பெற்றுக் கொண்டு உழலுகின்றனர். என்றும் 'அரிய வஸ்துவிற்கே அதிக ஆபத்து.'

# பாலபோதனையும் பாலரின் உணர்ச்சியும்.

"செய்யுள் நடையும், மதவிஷயங்களும் இளம்பிராய முதற்கொண்டே பள்ளிக்கூடங்களில் சிறுவர்க்குப் போதிக்கப்படுகின்றன. ஆனால், அவற்றைச் சிறுபிள்ளைகள் அறிந்துகொள்ளுவார்களா என்பதுதான் விளங்கவில்லை" என்று 24-3-28 மாலையில் சென்னை மைலாப்பூரில் அட்வகேட் திரு. ப. வ. நாராயணய்யர், எம். ஏ; எம். எல். அவர்கள் இல்லத்தில், திரு. கா. நமச்சிவாய முதலியாரவர்கள் தலைமையின்கீழ், சென்னைச் சட்டசபை அங்கத்தினர் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள், "தமிழும் கவியும்" என்பதுபற்றி நிகழ்த்திய பேருரையில் உரைத்தனரென்பது தெரிகிறது.

> "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்"
> "ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா ?"
> "விளையும்பயிர் முளையிலே தெரியும்"
> "இளமையிற் கல்"

என்பன போன்ற பழமொழிகளைக் கவனித்துப் பார்ப்பின் செய்யுள் நடை, மதவிஷயங்கள் ஆகியவற்றைச் சிறுபிள்ளைகள் அறிந்துகொள்ள முடியாமற் போகாது என்பது நன்குவிளங்கும். அறிந்துகொள்வதும், அறிந்துகொள்ள முடியாமற் போவதும் ஆசிரியரின் அக்கரைபொருந்திய போதனையைப் பொறுத்திருக்கிறது. போதனை பொறுப்புடையதாயிருப்பின் அவர்கள் அவசியம் அறிந்துகொள்ளுவார்களென்பதில் ஐயமில்லை.

"அறஞ்செய விரும்பு" என்பதைச் சிறுபிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடுத்தால் அதன் விரிவான பொருளை இந்தச் சிறுபிள்ளைகள் உணருவார்களா? உணரமாட்டார்கள்" என்றும் மேற்கூறிய பெரியார் கூறியிருக்கிறார். 'குருவியின் தலையில் பனங்காயை வைத்தால் அது தாங்குமா?' என்ற கேள்வி உண்டாகும்போது, 'தாங்காது' என்ற விடையே ஏற்படும். அதுபோல, "சிறுபிள்ளைகள் விரிவான பொருளை உணருவார்களா?" என்ற கேள்வி பிறக்கும்போது, 'உணரமாட்டார்கள்' என்ற விடைதான் வரும். ஆயினும், 'அறஞ்செய விரும்பு' என்பதற்குரிய பொருளைப் பிள்ளைகளின் அறிவுக்குத் தக்கவாறு இலகுவான முறையில் போதித்தால் அவர்களுக்கிது விளங்காமற் போகாது. 'அறஞ்செய விரும்பு' என்பதற்கு முற்காலத்திலும், தற்காலத்திலும் ஆசிரியர்கள் பிள்ளைகளுக்குக் கூறிக்காட்டும் பொருள், 'தருமஞ்செய்ய ஆசைப்படு' என்பதாகும். இதைச் சற்று விரிவாக, "நியாயத்தையே செய்ய ஆசைப்படு" (அறம்—நியாயம்) என்று சொல்லிக்கொடுத்தால், அதை 3-ம் வகுப்புப் பிள்ளைகளாகிய சுமார் 8 வயதுப் பிள்ளைகள் உணருவது கடினமாயினும் காரண காரியங்களோடு தெளிவான—ஜனங்கள் பேசிக்கொள்ளும் அனுபவபாஷை நடையில் போதிப்பின் உணரமாட்டார்களென்பதில்லை.

சிறுவர்கள், செய்யுளின் சொற்களில், இன்ன பொருளைக் கவி அமைத்துள்ளாரென்பதைக் கடின செய்யுட்களில் அறிய முடியாவிட்டாலும் பருவத்திற்கு இணங்க—பாலபோதகர் போதிப்பதற் கிணங்க, ஓரளவேனும் சாதாரண செய்யுளின் பொருளை உணருகின்றார்கள். இவ்வாறு சிறிதேனும் உணரும் சக்தியிருப்பதனாலேயே கவி (செய்யுள்) களின் இன்பத்தைச் சிறுவர்கள் தங்களுக்குப் போதிக்கப்பெற்ற வகையில் உணர்ந்து, பேரின்பத்தோடு பரவசர்களாய்ப் பார்ப்போர் களிக்க—சபையோர் சந்தோஷிக்க பாடசாலைகள், உபாத்திமைச்சங்கங்கள் முதலியவற்றில் நடைபெறும் பற்பல

வருடவிழாக்களில் சம்பாஷணை, நடித்தல் முதலிய செயல்களில் சிறந்து காணப் பெறுகின்றனர்கள். இது, அவ்விழாக்களில் அக்கிராசனர்களாயும், உபந்நியாசகர்களாயும், காட்சியாளர்களாயும் வந்திருந்து கண்டுகளித்த அதிகாரிகளுக்கும், கல்வி நிறைந்த பேரறிவாளர்களுக்கும், தனதனவான்களாகிய பெற்றோர் முதலியவர்களுக்கும் தெரிந்த விஷயமே.

இவ்விதம் சிறுவர்கள் செய்யுட்பொருளையும் உணர்ந்து கொள்ளும்படி செய்வது போதகர்களைப் பொறுத்ததாயிருக்கிறது. இத்தகைய போதனையைச் செய்யும் ஆசிரியர்கள் கவலையற்ற மனதோடுகூடியவர்களா யிருக்க வேண்டும். அப்படியிருந்தால் மாத்திரமே மேற்கூறிய போதனையை அக்கறையோடு செய்யக்கூடும். ஆதலின் அந்த ஆசிரியர்களைக் கவலையற்ற மனதோடும்கூடி யிருக்கச் செய்யவேண்டியது அவசியம். இக்காலத்திலோ ஆசிரியர், பாடசாலைக்கு, வீட்டைவிட்டுப் புறப்படுவது முதல் பாடசாலைக்குள் புகுவது வரையிலும்—என்? புகுந்துங்கூட, தமது குடும்பத்துக்குப் போதாத சம்பளத்தாலுறும் கஷ்டநிலையைப் பற்றியும், அதிலும் 3-வது மாதம் ஒருமாதச் சம்பளங்கிடைக்கும் நேர்மையைப்பற்றியும், எண்ணெய்க்காரி, பாற்காரி, தயிர்க்காரி முதலியவர்கள் பாடசாலைக்கே வந்து தாங்கள் கொடுக்கவேண்டிய பாக்கியைக் கேட்டுத் தொந்தரவு செய்ய அவர்களுக்குப் பதில் சொல்லிச் சமாதானம் செய்து அவர்களை அனுப்பும் தொல்லைகளைப் பற்றியும் மிகுந்த கவலையுடையவர்களாய்த் தயங்குகின்றனர்கள். ஆசிரியர்களை இந்நிலையில் வைத்திருக்கும்போது அவர்கள் எப்படிச் சிறுவர்களுக்குச் செய்யுட்பொருளும் தெரிந்து கொள்ளும்படி பிரயாசைப்பட்டுப் போதனை செய்வார்கள்? ஆசிரியர்களை இந்நிலையில் வைத்திருப்பதனாலேயே அவர்கள் சிறந்தபோதனை செய்யாமற்போகச் சிறுவர்கள் செய்யுட்பொருள் முதலியவற்றை உணரும் சக்தியில்லாதவர்களாய்ப் போகின்றனர்கள்.

இவ்வாசிரியர்கள், இவ்வித நிலைமையிலிருப்பதற்கு எவர்கள் காரணம் என்பதையும், முற்காலங்களில் இவ்வாசிரியர்கள் எந்நிலைமையில் வைக்கப் பெற்றிருந்தார்கள்? எத்தகைய கல்வி கற்பித்து வந்தார்கள்? என்பதையும் நம் திரு. முதலியாரவர்கள் போன்ற சட்டசபை அங்கத்தினர் முதலானவர்கள் கவனித்துத் தக்கது செய்வார்களாயின் சிறுவர்களுக்கு அர்த்த ஞானமுண்டாகத்தக்க சிறந்தபோதனை ஏற்படுவதில் எவ்விதத்தடையுமிராது. இவ்வாசிரியர்கள், மகாநாடுகள் கூடிக் கரடியாகக் கத்தினாலும் ஏனென்று கேட்பார் இல்லை. இது இவ்வாசிரியர்களின் கெட்டகாலமென்றே சொல்ல வேண்டியிருக்கின்றது. என் செய்வர் ஏழை ஆரம்ப ஆசிரியர்கள்! ஏழை சொல் அம்பலமேறுவது அரிதா யிருக்கின்றதே. "நீங்கள் நம் நாட்டின் முன்னேற்றத்துக்கு அடிப்படையானவர்கள், உலகமே உங்களால்தான் உன்னத நிலைமைக்கு வரவேண்டியிருக்கிறது" என்று ஆரம்பக் கல்வி ஆசிரியர்களைப் புகழ்ந்து பலர் செய்யும் மேடைப் பிரசங்கங்களுக்குமட்டும் குறைவில்லை. ஆசிரியர்கள் கூறும் சொற்கள்மட்டும், 'செவிடன் காதில் ஊதிய சங்குபோ'லாகிறது. ஒருவேளைக் கஞ்சிக்கும் வழியில்லாத இவ்வாசிரியர்களால் என்ன காரியங்கள் செய்ய இயலும்? இவர்களுக்கு இடம், பொருள், ஏவல் யாவும் இசைந்திருப்பின் இவர்கள் எவ்வளவோ உயர்ந்த போதனைகளைச் சிறுவர்களுக்கு மிக உற்சாகத்துடன் செய்வார்கள். இவற்றைச் சிந்தித்து ஆசிரியர்களுக்குச் சௌகரியமான ஒரு ஏற்பாட்டைச் செய்தால் செய்யுட் பொருள்களையும், மதவிஷயங்களையும் ஆரம்பப் பாடசாலைகளில் 10-வயதுக்குள் சிறுபிள்ளைகள் அறிந்துகொள்ள ஏதுவுண்டாமென்பதில் ஐயமில்லை.

P. பரிமணப் பல்லவராயர்.

# அறிஞரின் அமுதமொழிகள்.

(49-ம் பக்கத் தொடர்ச்சி.)

51. தன்னையறியு மறிவே யறிவாகும் பின்னை யறிவது பேயறிவாமே.

To know one's self is knowledge, other knowledge is inferior.

52. அற்கா வியல்பிற்றுச் செல்வம் அதுபெற்றா லற்குப வாங்கே செயல்.

Riches are not permanent in their nature; if you get them, do with them what will prove permanent; i.e., practise virtue.

53. அற்ப ஆசை கோடி தவத்தைக் கெடுக்கும்.

The coveting of a small thing destroys the penance of years.

54. அற்பனுக்குப் பவிஷு வந்தால் அர்த்த ராத்திரியிற் குடை பிடிப்பான்.

If a mean person has obtained wealth, he will carry an umbrella even at midnight.

55. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற் குற்ற மறையா வழி.

It is vain to cover our nakedness (small faults), while our crimes are exposed to view; i.e., not relinquished.

56. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

The first objects of adoration are the father and mother.

57. ஆய்ந்தோய்ந்து பாராதான் தான் சாவக் கடவன்.

He who does a thing inconsiderately should suffer loss.

58. ஆரியக் கூத்தாடினுங் காரியத்தின்மேற் கண்ணாயிரு.

Though it be a sight ever so alluring, yet draw not your attention from your aim.

59. ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை மாற்றுவா ராற்றலில்பின்.

Though the fortitude with which those who practise austerities endure their hunger is very great, yet it is inferior to the energy of the generous who feed the hungry.

60. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து மாண்ட வுஞற்றி லவர்.

Though who are too idle to engage in any enterprise, will hear the words of rebuke which are applied to them.

61. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே கெடுக்குந் தகைமையவர்?

Who can destroy those with whom are counsellors, that caution them faithfully?

62. வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க் கியாண்டு மிடும்பை யில.

To those who have adored, at the feet of him who is without desire or aversion, there shall be no suffering for eternity.

A. P இராமன், B. A.



## கிருஷ்ணஸிங் அல்லது குப்பறியும் சேடன்

(54-ம் பக்கத் தொடர்ச்சி.)

அக்கன்னிகை மெதுவாய் 'ம, ஞ வா?' என்றாள். ஆனந்தசிங், 'ம, ஞ வென்றால் மனோன்மணியைத்தான் குறிக்கவேண்டும்' என்று உணர்ந்து, "சரி நாம் சரியான வழியேதான் போகிறோம்" என்று திருப்தியடைந்தான். இப்போது மனோன்மணி அக்கள்ளக் கூட்டத்தாரோடு சம்பந்தப் பட்டிருக்கிறாளென்பது அவனுக்குத் தெரிந்தது.

அவன் முன்போலவே எல்லா இரகசியங்களும் தெரிந்த ஆசாமிபோலவே கொஞ்சம் அதிகாரத்தோடு அம்முரட்டு மனிதனை நோக்கி "முனியன் எங்குச் சென்றான்?" என்றான்.

அவன் அம்மாதிரி கூறி வாய்மூடுமுன் கீழே எங்கோ கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. அவன் ஓகோ டாக்டருக்காகச் சென்றமாது திரும்பி வருகிறாள் என்று தெரிந்துகொண்டான். இப்போது எப்படியும் அவன் சங்கதி சீக்கிரத்திலோ சற்றுநேரம் கழித்தோ எல்லாம் வெளிப்பட்டுவிடும் என்பது நிச்சயம். ஆனால் அவன் சமயோசித புத்தியுடைய நிபுணனானமையால் குழப்பமுண்டாகு முன்பே வெளிப்பட்டு விடவேண்டுமென்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டான்.

அவன் மிக்க சுறு சுறுப்போடு, "ஓ! யாரோ வருகிறார்கள்; சீக்கிரம் போய் விடுங்கள்" என்று கூறிக்கொண்டே அங்கிருந்த இருவரையும் அவரவர்கள் வந்த வழிகளை நோக்கி மெதுவாகவும் துரிதமாகவும் தள்ளி விட்டான். அவர்கள் உடனே மாயமாய் ஓடி மறைந்து விட்டது அவனுக்கே மிக்க வியப்பாயிருந்தது.

அச்சமயம் ஆள் அருகில் வந்து கொண்டிருப்பது கேட்டது. அவன் உடனே பீரோவிலிருந்து அண்டை வீட்டிற்குச் செல்லும் வழியிலுள்ள கதவைத் திறந்துகொண்டு தான் வந்த வழியை மூடிவிட்டுப் படிகளிலிறங்கித் துரிதமாய் அவ்வீட்டைக் கடந்து சென்றான். இவன் பாதிப்படிகளைக் கடக்கும்போது மேலே பீரோவின் கதவை யாரோ திறப்பதுபோல் சத்தம் கேட்டது.

---

## 7—வது அத்தியாயம்

ஆனந்தசிங் அவ்வீதியைக் கடக்குமுன் தன்னை யாரோ தொடர்ந்து வருகிறார்களென்றுணர்ந்து குறுக்குவழிகளில் நுழைந்து சென்றான். சற்று நேரத்திற்குள் முன்பு தன்னை வீட்டுவரையில் தொடர்ந்து வந்த அதே குட்டை மனிதன்றான் இப்போதும் வருகிறானென்பது தெரிந்தது. அவன், "இவனை யேமாற்றி நம் தந்தையின் பின் செல்லும்படி செய்தோமே; அவர் எங்கே சென்றார்? இவன் எப்படி யிங்கு வந்தான்!" என்று சிந்தித்தான். பிறகு அவர் இவன் கண்களுக்குத் தப்பித்துக் கொண்டதால் இவன் உடனே திரும்பி இந்த வீட்டின் எதிரில் வந்து காத்துக் கொண்டிருந்திருப்பான் என்று தீர்

மானித்துக் கொண்டான். இப்போது அவன் எங்கே நாம் வேறு, நமது தந்தைவேறு என்ற உண்மையை யறிந்துகொள்கிறானோ வென்பதே ஆனந்த சிங்கின் பயம்.

கடைசியில் அவன் தன் வீட்டிற்குள் நுழையும்போது குள்ளன் தன்னை விடாது பின்பற்றியே வந்ததைக் கண்டு மிக்க கோபமடைந்தான். ஆனந்த சிங் வீட்டிற்குள் நுழையும்போது, "சரி எப்படியும் நடந்த குற்றம் நடந்து விட்டது. ஆயினும் அதனால் அவ்வளவு கெடுதி நேராதென்றே நம்புகிறேன். அவனுடைய பிடிவாதம்தான் எனக்கு ஆச்சரியத்தை யளிக்கிறது. ஆனால் அவன் இந்த வேலைக்குத் தக்கவனே. நான் மறுபடி இந்த இரவு தந்தையின் உதவியைக் கோரவேண்டியதா யிருக்கிறது. ஆனால் எனக்குப் பிரியமில்லை" என்று கூறிக்கொண்டே சென்றான்.

அவன் மேல் மாடிக்குச் சென்றதே அங்கு அவன் தந்தை யிருப்பதைக் கண்டான். கிருஷ்ணசிங் தன் சுதனைக்கண்டதே புன்னகையோடு, "ஏனம்மா! எங்கள் நகரை நன்றாய்ச் சுற்றிப் பார்த்தாயா? போன காரியம் அனுகூலந் தானே? நான் அந்தக் கற்றுக்குட்டிப் பயலுக்குச் சற்று நேரத்திற்குள் கடுக்கா கொடுத்துவிட்டு, அவனைப் பின்பற்றி நெடுநேரம் திரிந்தேன். அவன் என்னைத்தேடி யலைவதைக்கண்டு சிரித்துச் சிரித்து என்பக்கமெல்லாம் நோவெடுத்துக் கொண்டது. கடைசியில் அவன் வந்த வழியே திரும்பித் துரிதமாய்ச் செல்வதைக் கண்டு நான் வீட்டிற்குத் திரும்பி விட்டேன். இனி உன் விவகாரம் எப்படி நடந்தது கூறு பார்ப்போம்" என்றான்.

ஆனந்தசிங் யாவும் கூறினான். அதைக் கேட்ட அவன் தந்தை, "அடா! அந்தப் பயல் மறுபடியா உன்பின் வந்திருக்கிறான். நல்லது அவனுக்கு இராத்திரிக்குச் சரியான ஆட்டங் காட்டுகிறேன்." என்றான்.

ஆனந்த:—"தாங்கள் அப்படித்தான் செய்ய வேண்டுமென்று நினைக்கிறேன். எனக்குத் தங்கள் உருவம் இன்னொரு முறை இரவலாகவேண்டும்," என்றான்.

கிருஷ்ணசிங்:—"ஒருதரமா! ஐம்பதுதரம் வேண்டுமானாலும் சரி" என்றான்.

ஆனந்:—"தந்தையே! தாங்கள் இன்றிரவிற்கப்பால் இதில் சம்பந்தப்படலாகாது. ஏனெனில் அவர்கள் நீதான் இதில் வேலை செய்கிறாய் என்று அறிந்து கொண்டிருக்கிறார்கள். இதில் மிக்க சாமார்த்தியத்தோடும், தந்திரத்தோடும் செய்யப்பட்ட பெரியமர்மம் அடங்கி யிருக்கிறது. அதில் பூராய் நுழைந்து அதைக் கண்டு பிடிக்கவேண்டும். இதில் தைரியமும் துணிகரமும் கன்மனமுமுடைய ஸ்திரீகளும் புருடர்களும் ஒரு கூட்டமாய்க்கூடியிருக்கிறார்கள். அவ்வீட்டில் அமைக்கப்பட்டிருக்கும் கள்ளவழிகளையும், எச்சரிக்கை செய்வதற்காக அமைக்கப்பட்டிருக்கும் இரகசிய மணிகளையும் கவனித்தால் இவர்கள் நெடுநாளாக யோசனைசெய்து இந்த விவகாரத்தை நடத்துகிறார்களென்பது தெரிகிறது. அப்பா! நான் ஒரு ஆச்சரியமான பெரிய அபாயகரமான ஆழ்ந்த மர்மத்தை வெளிக்குக் கொண்டுவரப் போகிறேன். எனக்கு இன்னும் இதன் முடிவு என்னாகுமென்று புலப்படவில்லை. ஆனால் நான் சரியான உளவுகளையே சேகரித்துக் கொண்டிருக்கிறேனென்பது தெரிகிறது." என்றான்.

(தொடரும்.) ஆரணி-குப்புசாமி முதலியார்.

# சிறு வேடிக்கைக் கதைகள்.

## கிழவி குமரியான கதை.

ஒரு வீட்டில் எழுபத்தைந்து வயதுள்ள கிழவி யொருத்தி யிருந்தாள். அவளுக்குப் புருஷன் உயிருடனிருந்தான். அவளுடைய பற்களெல்லாம்



வீழ்ந்து, தலை உரோமங்களெல்லாம் வெளுத்துப்போய் விட்டன. அப்படி யிருந்தாலும் அவளுக்குப் புருஷ இச்சை அதிகம். ஆனால் அவளுடைய புருஷன் எண்பது வயதுக்கு மேற்பட்டவனாதலால் அவனுக்குச் சமுசார இச்சையே யில்லாமல் நீங்கிவிட்டது. அதனால் அவன் கிழவியோடு விருப்பமாகப் பேசுவதேயில்லை. கிழவிக்கு வியாகுலம் அதிகம். இப்படியிருக்கும் போது அந்தக் கிழவிக்கு மகனும் மருமகளு மிருந்தார்கள். அவர்கள் இளம் பிராய முடையவர்களாதலால் தினந்தோறும் கொஞ்சி விளையாடிக்கொண் டிருந்தார்கள். அவர்களைப் பார்த்துப் பார்த்துக் கிழவி பொறாமைகொண்டு வயிறு பொருமினாள். "நமக்குத் தலை நரைத்துப் பல்லும்போய் விட்டதாலேயே கிழவன் நம்மைச் சட்டைபண்ணாமலிருக்கிறான்; அவனுக்குப் பிரியம் வரும்படி நாம் ஏதாவது தந்திரம் செய்யவேண்டும்" என்று பக்கத்து வீட்டிலிருந்த ஒருபெண்ணிடம்போய், "அம்மா! எனக்குத் தலைநரைத்துப் பல்லும் போய்விட்டதால் கிழவன் என்னை விரும்பிப் பார்க்கிறதில்லை; என் மகனும் மருமகளும் கொஞ்சுவதைப் பார்த்தால் எனக்கு வயிறெரிகிறது; ஆதலால் கிழவனை மயக்க நீ ஏதாவது கூறவேண்டும்" என்றாள்.

அந்தப்பெண், அக்கிழவியின் கெட்ட எண்ணத்திற்கு வெறுப்புற்று, "கிழட்டுச்சவமே! உனக்குத் தக்க புத்தி கற்பிக்கிறேன்" என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டு அவளைநோக்கி, "பாட்டி! நீ பல்கட்டிக்கொள்; தலை உரோமம் கறுப்பாக நான் மருந்து பூசி விடுகிறேன்; அதன் மேல் நீ தாத்தாவிடம் பேசினால் அவர் மயங்கிவிடுவார்" என்று சொன்னாள். உடனே கிழவி நூறு ரூபா செலவுசெய்து பல்கட்டிக்கொண்டு வந்தாள். அவ்விரவு அந்தப்பக்கத்துவீட்டுப்பெண் ஒரு டின்னில் தார் வாங்கிக்கொண்டு வந்து கிழவியின் தலை நிறையத் தடவி, "நீ கையை மாத்திரம் தலைக்குக் கொண்டுபோகாதே;

இப்படியே சென்று தாத்தாவிடம் பேசு" என்று சொல்லிவிட்டாள். கிழவி கருநாடகப் பேர்வழியாதலாலும், எப்படியாவது புருஷனை மயக்கவேண்டுமென்று நினைத்ததாலும் அவள் தாரின் ஆபாசத்தைக் கவனிக்காமலே கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துத் தான் குமரிபோலிருக்கக் கண்டு மகிழ்ந்து கிழவனிடம் போய் அருகில் உட்கார்ந்து கொஞ்சிப் பேசினாள். பற்கள் ரொட ரொட வென்று ஆடுகிறசத்தம் கேட்டது. கிழவன் அவளுடைய கோலத்தைக்கண்டு முறைத்துப் பார்த்தான். உடனே கிழவி அவன் பிரியங்கொண்டு தன்னைப் பார்க்கிறானென்று நினைத்து அவன் முகத்தோடு முகஞ்சேர்த்து முத்தங்கொடுத்தாள். ஐயோ! கிழவனுடைய மூஞ்சியிலும் மீசையிலும் தார் ஒட்டிக்கொண்டது; அவன், "என்னடி கிழட்டுக் கழுதை!" என்று அவள் தலையில் கையைப்போட்டு அவளைத் தள்ளினான். கிழவன் கையெல்லாம் தார் ஒட்டிக்கொண்டது; கிழவன் கண்ணாடியில் முகத்தைப்பார்த்தான்; மூஞ்சி பிசாசுபோல் விகாரமாயிருந்தது. கிழவனுக்குக் கோபம் பொங்கிவிட்டது. அவன், "அடி கிழட்டுச் சிறுக்கி! நீ குமரியாகி என்னைமயக்க நினைத்துத் தலையில் தாரைப் பூசிக்கொண்டுவந்து என் முகத்தைப் பாழாக்கி விட்டாயே!" என்று பல்லைக் கடித்துக்கொண்டு அவள் கன்னத்தில் நான்கு குத்துவிட்டான். அவள் கட்டியிருந்த பல் கொத்தோடு கீழே விழுந்தது; கிழவன், அவள் தலையில் பூசியிருந்த தாரைத் துணியால் துடைத்தான்; சோப்புப்போட்டுத் தேய்த்து அதைக் கழுவினான். எதனாலும் அதுபோகவில்லை. முடிவில் அவன் கிழவி தலைமயிரைச் சிரைத்து மொட்டை யாக்கிவிட்டான். பின்பு கிழவி வெளுத்த கூந்தலும்போய் வெளியேற வெட்கப்பட்டு வீட்டிற்குள் அடங்கிக் கிடந்தாள். செம்பியன்.

* * *

வடக்கிலுள்ள தெலுங்கு நாட்டிலிருந்து தென்னாட்டின் க்ஷேத்திரங்களைத் தரிசனை செய்துகொண்டு திருநெல்வேலி ஜில்லாவையடைந்த ஒருவன் இரவுபட்டதும் அன்று இராப்போதைக் கழிக்க ஓர் வீட்டையடைந்தான். அவ்வீட்டிலுள்ளவனுக்குத் தெலுங்கு தெரியாது. அவ்வீட்டிற்குள் தெலுங்கன்போனதும் அன்றிரவு தங்கிப்போகத் தனக்கு இடம் வேண்டுமென்றும், தான் கொண்டு வந்த மூட்டைகளை ஒருபுறம் வைத்திருக்கவேண்டுமென்றும் தனது பாஷையில் அவ்வீட்டுக்காரனிடம் சொன்னான். அவன் சொல்வதின்னதென்றுணராத தமிழன் விழித்துக்கொண்டிருந்தான். அப்படி யிருக்கையில் தெலுங்கன் தான் சொல்லியதை அங்கீகரித்ததனாலேயே அவன் பேசாமலிருக்கின்றானென் றூகித்துத் தனது மூட்டையை எடுத்துக்கொண்டு உள்ளே சென்று ஒரு புறத்தில் வைத்து, "ஈ மூட்டா அட்டபடி உண்ணி" என்று சொன்னான். இதைக்கேட்ட தமிழன் வெகுண்டு, "எங்காணும் உமக்கென்ன கேடுகாலமோ! ஏதேதோ இழவெல்லாம் இங் கிட்டுக்கொண்டு வந்து வைக்கிறையே! இது என்ன இழவு! ஈ யாம்! மூட்டையாம்! (மூட்டுப் பூச்சி), அட்டையாம்! படி உண்ணியாம்! (ஒருபடியளவு உணி), ஒருபூச்சி இருந்தாலே இரவெல்லாம் தூக்கத்தைக் கெடுக்கிறதே! இத்தனை இழவும் ஏககாலத்தில் கொண்டுவந்து வைத்தால் யார் கெடுவது! எடுத்துக்கொண்டு ஓடிப்போ! இங்கே வைக்காதே" என்று அவற்றை எடுத்தெறிந்தான். தமிழனுடைய கோபத்தையும், செய்கையையுங் கண்ட தெலுங்கன் ஒன்றும் தோன்றாதவனாகி, "அரவான்ளுகொம்பா அத்வானமு" என்று சொல்லிக்கொண்டே தன்மூட்டையை எடுத்துத் தோளில் மாட்டிக்கொண்டுபோனான்.

பெருமாள் பிள்ளை, கர்ணம், செல்லம்பட்டி.

## புதிய ஜீவிய சந்தாதார்.

பினாங்கைச் சேர்ந்த பிறை யென்னு மூரிலுள்ள திருவாளர்-என். கே. நாகப் பிள்ளை அவர்கள் இம்மாதம் நம் போதினிக்கு ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்திருக்கிறார்கள். இவர்களின் தமிழபிமானமும், பத்திரிகாபிமானமும் மிகப் போற்றத்தக்கன. இவர்களின் ஆயுளை இறைவன் நீடித்திருக்கச் செய்வானாக. ப-ர்.

---

## பொது வர்த்தமானம்.

**லண்டனுக்கும் இந்தியாவுக்கும் ஆகாயப் போக்குவரவு:**-பிரிட்டிஷ் அரசாங்க ஆகாயக் கப்பல்கள் லண்டனிலிருந்து இந்தியாவிற்கு வரக் கூடியனவாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் வழிகளில் சமையற்காரர்கள் சௌகரியமாக ஆகாரம் சமைக்கவும் வட்டிக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. இவை வழியில் பாரசீகம் என்னும் தேசத்தையும், கடலையும் கடந்துவரும். இக் கப்பல்கள் செய்வதற்கு அநேகவித உலோகங்கள் உபயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன. இவைகளின் பக்கத்தில் சிறகுபோன்ற வில் 93 அடி கொண்டதாயும், 9 டன் நிறையுள்ளதாயு மிருக்கிறது. இக்கப்பல்களின் அறையில் 15-பேர்கள் இருக்கத் தாராளமாக இடமிருக்கிறது. மேலும் கப்பலோட்டி, உதவிக்கப்பலோட்டி, உதவிக் காரியஸ்தன் ஆகிய 3-பேர்களுக்கு மிடமிருக்கிறது. இவைகளில் 3 - இஞ்ஜின்கள், மொத்தம் 1500 குதிரை யோட்ட முள்ளனவாயும்; மணிக்கு 120-மைல் செல்லக்கூடியனவாயு மிருக்கின்றன. கப்பலைச் செலுத்தும் புகையை உண்டுபண்ணக்கூடிய காஸோலைன் (Gasoline) என்னும் வஸ்துவில் 760-மைலுக்குப் போதுமானதை ஒரே தடவையில் எடுத்துச் செல்கின்றன. சமுத்திரத்தைத் தாண்ட இவ்வேற்பாடு வெகு சௌகரியமா யிருக்கிறது.

* * *

**மாட்டில் பால் கறக்கும் பாம்பு:**- இந்தியாவில் " தாமின் " என்று ஒரு வகைப் பாம்பு இருக்கிறது. இது விஷமில்லாத பாம்பாயினும், கிராம வாசிகள் இதைக் கண்டவிடத்தில் கொன்று விடுவார்கள். இப்பாம்பு தங்கள் பசுக்கள், எருமைகளின் மடியிலிருந்து பால் கறந்து விடுவதாகக் குடியானவர்கள் சொல்லுகிறார்கள். மாட்டின் பின்னங் கால்களை இப் பாம்பு கட்டிக்கொண்டுவிடுமாம். இதனால் பயந்து திக்பிரமை கொண்டு நிற்கும் மாட்டின் மடியிலிருந்து இது பால் குடிக்குமாம். அதன் பின்னர் அந்த மாடு பால் கறப்பதே யில்லையாம். ந. ச.

* * *

**சாது பொருள்தேட முயன்றார்:—** "ஒரு பஜனைக்கோஷ்டி விமரிசையாய் நடந்துவரும் காலத்தில் அப்பஜனைக் கோஷ்டியின் அடியாருள் ஒரு ஞானி வந்து நுழைந்தார். அவர் வந்து அடியாருக்கனுதினம் ஞானபோதத்தை விளக்கி அடியாரை ஆனந்தக் கடலிலாழ்த்தினர். பஜனையோ பின்னும் விமரிசையாய்நடந்துவந்தது. கொஞ்ச காலத்துக்குள் அவர்மனதில் ஓர் நினைவுதித்தது. அந்த ஞானவான் பஜனைக் கோவிலுள் இருக்கும் பொருள் மீதாசை கொண்டார்; அதைக்கவர அவர் அக்கிராமத்துக் குறவரிடம் விளம்பினார்; குறவரும் அவ்வாறே அர்த்த ராத்திரியில் வந்தார்கள். இதையறிந்த கிராமாதிகாரி குறவரைப் பிடித்துக் கண்டிக்க அவர்கள் உள்ளதை ஒளிக்காமல் விளம்பினர். இதையறிந்த பஜனைக் கோஷ்டியார் அவரை அவ்வூரை விட்டகற்றினர். நடந்த விடம் ரெட்டிபாளையம்" என்று நம் சந்தாதாரர்களி லொருவராகிய பெருமாள் பிள்ளை யென்பவர் தெரிவிக்கிறார்.

* * *

**தங்க இருப்பு:—** உலகில் உள்ள எல்லா அரசாங்கங்களிடமும் சேர்ந்து மொத்தம் 251,98,00,000 பவுன் பெறுமான தங்கக் கையிருப்பிருக்கிறதாம். ந. ச.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்

விபவ௵ புரட்டாசி௴—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,
பசலி 1338—கொல்லமாண்டு 1104—ஹிஜரி 1347
இங்கிலீஷ் 1928௵ செப்டம்பர்௴—அக்டோபர்௴

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | ஞா | துதி5-23 | அஸ்0-45 | அ0-45சி | ஷடசீதி புண்யகாலம் |
| 2 | 17 | திங் | திரி9-5 | சித்5-53 | பி5-53அ | விநாயக சதுர்த்தி |
| 3 | 18 | செவ் | சது14-5 | சுவா12-18 | சி12-18ம | ரிஷிபஞ்சமி |
| 4 | 19 | புத | பஞ்20-10 | விசா19-35 | சித்60 | தானியம் செலவிட |
| 5 | 20 | வியா | சஷ்26-4[illegible] | அனு27-28 | சி27-28பி | சஷ்டி, ஜய சப்தமி |
| 6 | 21 | வெ | சப்33-5 | கேட்35-13 | ம35-13அ | தூர்வாஷ்டமி |
| 7 | 22 | சனி | அ3[illegible]-45 | மூல42-5 | சித்60 | நந்தநவமி, அதுக்க நவமி |
| 8 | 23 | ஞா | நவ42-53 | பூரா47-43 | சி47-43அ | துலாயனம் நா-16-13 |
| 9 | 24 | திங் | தச45-25 | உத்51-35 | ம51-53அ | க்ஷீர விரதாரம்பம், கஜ லட்சுமி விரதம் |
| 10 | 25 | செவ் | ஏகா4[illegible]-0 | திரு53-3[illegible] | சித்60 | சர்வமத்வ ஏகாதசி |
| 11 | 26 | புத | து44-35 | அவி53-28 | பி53-28சி | அஸ்தாகார்த்தி நா 3-18 |
| 12 | 27 | வியா | திர41-13 | சத51-40 | ம51-40சி | பிரதோஷம் |
| 13 | 28 | வெ | சது36-23 | பூரட்48-20 | சித்60 | அனந்த விரதம் |
| 14 | 29 | சனி | ○30-28 | உத்43-58 | சி43-58ம | பௌர்ணமி |
| 15 | 30 | ஞா | பிர2[illegible]-30 | ரேவ[illegible]8-50 | அ38-50சி | மாளயபட்ச ஆரம்பம் |
| | அக்டோபர் | | | | | |
| 16 | 1 | திங் | துதி16-10 | அஸ்33-23 | சித்60 | கரிநாள் |
| 17 | 2 | செவ் | திரி3-48 | பர※27-58 | சித்60 | கிருத்திகை, அங்காரசதுர்த்தி |
| 18 | 3 | புத | சது1-40 பஞ்54-55 | கிரு22-48 | சித்60 | |
| 19 | 4 | வியா | சஷ்4[illegible]-33 | ரோ18-15 | அ22-48சி | |
| 20 | 5 | வெ | சப்43 48 | மிரு14-25 | மர60 | |
| 21 | 6 | சனி | அ39-30 | திரு11-33 | சித்60 | |
| 22 | 7 | ஞா | நவ6-10 | புன9-35 | சித்60 | |
| 23 | 8 | திங் | தச33-55 | பூசம்8-35 | சித்60 | |
| 24 | 9 | செ | ஏகா32-40 | ஆயி8-35 | சித்60 | |
| 25 | 10 | புத | து32-28 | மகம்9-35 | சித்9-35அ | |
| 26 | 11 | வியா | திர33-18 | பூரம்11-40 | சி11-40ம | |
| 27 | 12 | வெ | சது35-25 | உத்14-45 | சி41-45அ | கிருஷியாரம்பம் |
| 28 | 13 | சனி | ●38-23 | அஸ்18-55 | மர60 | சர்வ, பிதுரு, மாளய அமாவாசை |
| 29 | 14 | ஞா | பிர42 50 | சித்24-15 | சித்60 | நவராத்திரி ஆரம்பம் |
| 30 | 15 | திங் | துதி48-15 | சுவா30-43 | அ[illegible]0-43சி | சந்திரதரிசனம் 4-ம்பிறை போல் தெரியும் |
| 31 | 16 | செவ் | திரி54-25 | விசா57-58 | ம37-58சி | துலா ரவி நா-19-33, விஷு புண்யகாலம் |

| | | | |
|---|---|---|---|
| | குரு | செ ராகு | |
| | 2உமிது-செ<br>6,, து-புத<br>8, து-சுக் | | |
| | சனி கேது | | சூ-பு சுக் |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.